4 பக்கங்கள் 13 காசுகள்

பதிவு எண் எம். 8798

## இந்திரா காங்கிரஸ் முற்போக்கா?

மத்தியப் பிரதேசத்தில் மாஜி மன்னர்களும், பெரு நிலப்பிரபுக்களும் இந்திரா காங்கிரசில் சேருகிறார்கள். இந்த நிலப்பிரபுத்துவக் கும்பல், தங்களுக்கு ஜனசங்கமும், ராணி ராஜமாதா கூட்டமும் ஒரு நன்மையும் செய்யவில்லையென்று இவர்கள் அங்கலாய்க்கிறார்கள். காற்று ஆளும் காங்கிரசிக்கு அனுகூலமாக வீசுவதாக காங்கிரஸ் தலைவர்கள் பெருமைபட்டடுகிறார்களாம்.

இந்திரா காங்கிரசை முற்போக்கு, முற்போக்கு என்று உடுக்கடித்தவர்களே! இப்பொழுது அந்த முற்போக்குக்குள், எந்தெந்த பிற்போக்குப் பிண்டங்கள், தங்கள் சுயநலத்துக்காக புகுந்துகொண்டிருக்கின்றன என்பதைப் பாருங்கள்!

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

கதிர் 9 ஏ] மதுரை 21—12—71 செவ்வாய் [மலர் 105



# யாகியா இன்று ராஜினமா!

## ராணுவச் சட்டத்தை மீறி பாக். நகரங்களில் ஆர்ப்பாட்டங்கள்

புதுடில்லி, டிச. 20—

பாகிஸ்தான் அதிபர் யாகியாகான் இன்று ராஜினமா செய்வார் என்று பாகிஸ்தான் ரேடியோ அறிவித்தது.

மக்களுக்குப் பிரதிநிதித்துவமுள்ள அரசாங்கம் பதவி ஏற்கும் என்றும், உடனே யாகியாகான் பதவியைவிட்டு விலகுவார் என்றும் அதிகாரி ஒருவரின் அறிவிப்பை பாகிஸ்தான ரேடியோ வெளியிட்டது.

புதிய அரசு அமைக்க வருமாறு யாகியாகான் கேட்டுக் கொண்டதற்கிணங்க புட்டோ நியூயார்க்கிலிருந்து புறப்பட்டு வந்துகொண்டிருக்கிறார்.

**அவர் இன்று இஸ்லாமாபாத் வந்து சேருவார் என்று எதிர்பார்க்கப்படுகிறது**

அவர் நியூயார்க்கைவிட்டுப் புறப்படுமுன் அமெரிக்க அதிபர் நிக்சனைச் சந்தித்துப் பேசினார். வரும் வழியில் லண்டனில் பிரிட்டிஷ் வெளிவிவகார அமைச்சர் ஹியூமுடனும் பேச்சு நடத்தினார்.

பாகிஸ்தான் நகரங்களில் யாகியாகானை ராஜினமா செய்யக்கோரி ராணுவச்சட்டங்களைமீறி நடைபெற்ற ஆர்ப்பாட்டங்களையடுத்து யாகியாகானின் ராஜினமா பற்றிய செய்தி வெளியாகியுள்ளது.

பாகிஸ்தானின் முன்னாள் விமானப்படைத் தலைவரான ஏர்மார்ஷல் அஸ்கர்கான் உடனடியாக யாகியாகான்மீது விசாரணை நடத்த வேண்டும் என்று கோரியுள்ளார்.

இதற்கிடையே ஐக்கிய கூட்டுக்கட்சித் தலைவரான நூருல் அமீன் பிரதம மந்திரி பதவியைத் தாம் ஏற்கமுடியாது என்று அறிவித்தார்,

கூட்டுக்கட்சியின் மற்ற தலைவர்களின் கூட்டத்தில் தன்னுடைய நிலையை விளக்கியதாகவும் நூருல் அமீன் ஒரு பேட்டியில் கூறினார்.

இக்கூட்டத்தில் யாகியாகான் ராஜினமா செய்யவேண்டும் என்றும் ஒரு தேசிய அரசாங்கத்தை அமைக்க வேண்டும் என்றும் கட்சித் தலைவர்கள் கோரியுள்ளனர்.

"சகிக்கமுடியாத அவமானகரமான முறையில் நாட்டின் படைகள் சரணடையுமாறு செய்யப்பட்டிருப்பதும், போர் நிறுத்தம் செய்திருப்பதும் மக்களின் உணர்வுகளுக்கு மாறானவை. இந்த நிலைமை ஏற்பட்டதற்கு மூன்று ஆண்டுகளாக யாகியாகான் பின் பற்றிய கொள்கைகளே காரணமாகும்" என்று அவர்கள் விடுத்துள்ள அறிக்கை கூறுகிறது.

யாகியாகானை நூருல் அமீன் சந்தித்தாகவும் பாகிஸ்தான் ரேடியோ அறிவித்தது.

யாகியாகான் விலகினால் சிவிலியன் அரசாங்கத்தின் அதிபராகதான் பணியாற்ற முடியும் என்று நம்பவில்லை என்றும் நூருல் அமீன் கூறினார்.

### பாக். நட்புறவை வளர்ப்போம் பிரதமர் இந்திரா அறிவிப்பு

புதுடில்லி, டிச. 18—

பாகிஸ்தானுடன் நட்புறவை அமைத்துக்கொள்ள மனப்பூர்வமாக விரும்புவதாகவும் இதற்குத் தடையாக அங்கு சில அரசாங்கங்கள் தோன்றியது துரதிருஷ்டம் என்றும் பிரதம மந்திரி இந்திரா காந்தி "சன்டே டைம்ஸ்" என்ற லண்டன் பத்திரிகைக்கு அளித்த பேட்டியில் கூறினார்.

## இன்று ஸ்டாலின் பிறந்த நாள்



[21—12—1879 5—3 1953]

**"கம்யூனிஸ்டுகளாகிய நாம் புதிய வார்ப்பில் உருவாக்கப்பட்டவர்கள். நாம் ஒரு புதுப்பொருளால் ஆக்கப்பட்டவர்கள். பாட்டாளிவர்க்கத்தின் மாபெரும் போர்த்தந்திர நிபுணரான லெனினின் படையைச் சேர்ந்தவர்கள் நாம். இப்படையில் சேர்ந்திருப்பதைக் காட்டிலும் மேன்மைமிக்க மதிப்பு எதுவும் கிடையாது."**

—லெனினின் மரணத்திற்குப் பின், 1924-ஆம் ஆண்டு ஜனவரி 26-ம் நாள் ஸ்டாலின் ஆற்றிய உரையிலிருந்து.

### உழைப்பாளிகளின் உரிமைக் குரலை எழுப்புவீர்

முன்பெல்லாம் முதலாளிகளே, மிதவாதிகள் போல், முதலாளித்துவ ஜனநாயக உரிமைகளுக்காக வாதாடி, பொது மக்களின் ஆதரவைப் பெற்று வந்தனர்.

தற்போது, முதலாளிகளின் இந்த மிதவாதப் போக்கை தேடிப் பிடித்தாலும் பார்க்க முடியாது. அவர்கள் கூறும் "தனி மனித சுதந்திரம்" என்பதெல்லாம், வெறும் பேச்சுதான்.

தனிமனித சுதந்திரம் என்பதெல்லாம் பணம்பலம் கொண்டவர்களுக்கு மட்டும் தான். ஆனால் அதே சமயத்தில் பணமில்லாத கோடானுகோடி மக்கள். சுரண்டப்படுவதற்கே பிறந்த கச்சாப் பொருட்களாகத்தான் கருதப்படுகிறார்கள்.

எல்லா நாடுகளும், எல்லா மக்களும் சரி சமம். அனைவருக்கும சம உரிமை உண்டு என்ற, கொள்கைகளெல்லாம் மண்ணில் போட்டு புதைக்கப்பட்டு விட்டது.

எல்லா உரிமைகளும் மிக மிகச் சிறுபான்மையினரான சுரண்டும் கூட்டத்துக்குத்தான் என்ற கொள்கை கொண்டுவரப்பட்டுள்ளது. அதே சமயத்தில், சுரண்டப்படும் பெருவாரியான மக்களுக்கு ஒரு உரிமையும் இல்லை.

அன்று முதலாளித்துவ ஜனநாயக உரிமைகளுக்காக. முதலாளிகளே ஏந்திப்பிடித்த போர்க்கொடி தூக்கி எறியப்பட்டுவிட்டது. சுரண்டப்படும் மக்களின் உரிமைப் போர்க்கொடியை, கம்யூனிஸ்ட்டுகளாகிய நீங்களும், ஜனநாயக சக்திகளும்தான் ஏந்திப் பிடித்து, முன் செல்ல வேண்டும். உழைக்கும் மக்களின் உரிமைக் குரலை எழுப்புவதற்கு, தற்போது வேறு யாரும் இல்லை.

—ஸ்டாலின்

## பாதுகாப்புவிதிகளை ரத்துசெய்க!

### மார்க்சிஸ்ட் கட்சி தமிழ் மாநிலக் குழு செயலாளர் அறிக்கை!



ஏ. பாலசுப்ரமண்யம்

மதுரை, டிச. 19—

**இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக்குழு செயலாளர் தோழர் ஏ. பாலசுப்ரமணியம் கீழ் வரும் அறிக்கையை விடுத்துள்ளார்.**

17—12—7?-ந் தேதி இரவுடன் போர் நின்றுவிட்டது. கிழக்கே தோற்றதும் மேற்கே போர் நீடிக்கும் என்று கொக்கரித்த யாகியாகான் போர் நிறுத்தத்துக்கு உடன்பட்டு விட்டார். அந்த மட்டும் நல்லது. பங்களா தேசம் விடுதலை பெற்றது. அதை ஒட்டி எழுந்த போரும் முடிந்தது. இயல்பாகவே நாட்டு மக்கள் எல்லையற்ற மகிழ்ச்சி அடைந்துள்ளார்கள்.

சுதந்திர பங்களா தேசத்தை அங்கீகரிக்கவேண்டும் என்றும் அதற்கு ஆதரவுதரவேண்டும் என்றும் ஆரம்பமுதலே கோரி வந்த நாம் இம்மகிழ்ச்சியில் முழுமையாகப் பங்கு கொள்கிறோம். இந்திய அரசும் பாகிஸ்தான் அரசும் உடனடியாக சந்தித்து சமாதானத்தை உறுதிப்படுத்தத் தேவையான அனைத்து நடவடிக்கைகளையும் மேற்கொள்வார்கள் என்று இந்திய கம்யூனிஸ்ட் (மார்க்சிஸ்ட்) கட்சியின் தமிழ் மாநிலக் குழு எதிர்பார்க்கிறது.

போர் மூண்ட சூழலில்தான் இந்திய அரசு அவசரகால நிலை பிரகடனம் செய்தது. அந்த அவசரகால நிலைக்குத் தேவை என்று கூறியே இந்திய பாதுகாப்பு விதிகளும் நாடாளுமன்றத்தில்—நமது கட்சி எதிர்த்தும்—நிறைவேற்றப் பட்டன. இன்று போர் நின்று விட்டது. அத்துடன் அப்போரினல் எழுந்த அவசர கால நிலையும் முடிவுக்கு வந்து விட்டது, எனவே இந்திய மக்களின் சகல பிரஜா உரிமைகளையும் அடியோடு பிடுங்க அதிகாரமளிக்கும் இந்தப்பாதுகாப்பு விதிகளும் உடனடியாக ரத்துச் செய்யப்படவேண்டும் என்று கோருகிறேன். அவை இனி ஒரு விநாடிகூட நீடிக்கக் கூடாது என்றும் வற்புறுத்துகிறேன்.

### மதுரையில் வெள்ளத்தால் பாதிக்கப்பட்டோருக்கு

## உடனடியாக உணவு அளிக்கப்படவில்லை

### மார்க்சிஸ்ட் கட்சி நகர்குழு அறிக்கை

மதுரை, டிச. 18]—

வெள்ளத்கால் பாதிக்கப்பட்ட பகுதிகளுக்கு டிசம்பர் 18-ந் தேதி வரை மாநகராட்சி மூலமோ அரசுமூலமோ உணவு அளிக்க ஏற்பாடு செய்யவில்லை என்றும், பாதிக்கப்பட்டவர்களுக்கு உணவும் குடியிருக்க மாற்று இடமும் அளிக்கவேண்டும் என்று மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி நகர்க்குழு சார்பில் மதுரை கலெக்டரிடம் வற்புறுத்தப்பட்டது.

வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட பகுதிகளை டிச. 17-ம் தேதி தோழர்கள் கே, பி. ஜானகி அம்மாள், வி. கார்மேகம், வி. வீரபத்திரன், கே வாசுதேவன், கே. பூச்சி, பி. எம். குமார் ஆகியோர் சுற்றிப்பார்த்தனர். பாதிக்கப்பட்ட பகுதிகளில் கட்சிக்கிளைகள் நிவாரண வேலையில் முழு மூச்சுடன் ஈடுபட்டுள்ளனர்.

மாவட்டக் கலெக்டரை அன்றே பார்த்துப் பாதிக்கப்பட்டவர்களுக்கு உணவும், தங்கும் வசதியும் கோரிய போது ஆவன செய்வதாக கலெக்டர் வாக்களித்தார். ஆனல் டிச. 18-ந் தேதி வரை எந்தப்பகுதியிலும் பாதிக்கப்பட்டவர்களுக்கு உணவளிக்கப்படவில்லை. என்று மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி நகர் குழு சார்பில் விடுக்கப்பட்ட அறிக்கை கூறுகிறது.

### அமெரிக்காவில் பங்களாதேச தூதரகம்

வாஷிங்டன், டிச. 20—

அமெரிக்கத் தலைநகரான வாசிங்டனில் பங்களாதேஷ் தூதரகம் ஒன்று அமைக்கப் பட்டது.

பாகிஸ்தான் தூதரக அலுவலகத்திலிருந்து விலகிய ஊழியர்கள் இதை அமைத்தார்கள் இது தற்காலிகமானது.

இந்தக் குழுவின் தலைவரான சித்திக்கியூ பங்களாதேசை அங்கீகரிக்கும்படி அமெரிக்காவுக்கு வேண்டுகோள் விடுத்து உள்ளார்.

## புது வரிகள் ரத்து செய்யப்படமாட்டாது

கான்பூர், டிச. 20—

புதிதாக விதிக்கப்பட்டுள்ள வரிகள் ரத்து ஆகாது என்று மத்திய நிதி அமைச்சர் சவாண் அறிவித்துள்ளார்.

பங்களா தேஷ் அகதிகள் புனர் வாழ்விற்காக ரூ. 70 கோடி புதிய வரி போடப்பட்டது. இந்திய பாகிஸ்தான் போர் ஏற்பட்டதால் மேலும் 135 கோடி ரூபாய்க்கு புதிய வரிகளை மத்திய அரசு போட்டது. தவிர மாநிலங்களும் புதிய வரிகளைப் போட்டன.

இது குறித்து சவாணிடம் செய்தியாளர்கள் கேட்ட போது இப்போதுள்ள வரிகள் ரத்து செய்யப்படமாட்டாது என்று கூறினர்.

### சர்க்கரை ஆலைத் தொழிலாளர் மத்தியிலும்

## காட்டூர் கோபாலின் துரோகம் பரவுகிறது!



ஆர். உமாநாத்

சமீபகாலமாக தமிழகத்தில் வளர்ந்துவரும் தொழிலாளி வர்க்க போராட்டங்களையும், தொழிற்சங்கங்களையும் பிளவு படுத்த முதலாளி வர்க்கத்தின் ஈட்டியாக தி. மு. க. தொழிலாளர் பேரவை செயல்பட்டு வருவது அனைவரும் அறிந்ததே. அதுவும் அந்த பிளவு ஈட்டியின் கூர்முனையாக, பேரவையின் பொதுச்செயலர் திரு. காட்டூர் கோபால் விளங்குவதும் உலகறிந்த விஷயம். பஞ்சாலை, இன்ஜினியரிங் போன்ற பல தொழில்களில் உழைக்கும் தொழிலாளிகளுக்கு பல சந்தர்ப்பங்களில் துரோகம் செய்துவந்த திரு. காட்டூர் கோபால், போன வாரம், போராடும் சர்க்கரை ஆலைத் தொழிலாளர்களிடமும் தனது துரோகப்பிழைப்பை தொடங்கிவிட்டார்.

இரண்டாவது சர்க்கரை ஆலை ஊதியக்குழுவை, தங்களுடைய நியாயமான ஊதிய உயர்வை மறுப்பதற்கான கருவியாக சர்க்கரைஆலை முதலாளிகள் பயன்படுத்த முற்பட்டதை தமிழக சர்க்கரை ஆலைத் தொழிலாளர்கள், அறிந்து கொண்டனர். எனவே, அவர்கள் சம்பளம், பஞ்சப்படி, ரிடேயினங் அலவன்ஸ், கிராச்சூட்டி, வீட்டு வாடகை அலவன்ஸ் போன்ற கோரிக்கைகளை முன்வைத்து, ஊதியக் குழுவிற்கு வெளியில்பேசித் தீர்க்கவேண்டுமென, தமிழக சர்க்கரை ஆலைத்தொழிலாளர்கள் சம்மேளத்தின் தலைமையில், 1969-ம் ஆண்டில் நெல்லிக்குப்பத்திலும், புகளூரிலும் பேட்டவாய் தலையிலும் காட்டூரிலும், மோகனூரிலும் வேலைநிறுத்தங்கள் செய்தனர். இரண்டாவது ஊதியக்குழுவின்பரிந்துரைகள் வெளியான பிறகு அவை தங்களுக்கு சாதகமாக உள்ளன என அறிந்த முதலாளிகள் அதை எப்படியாகிலும் அமுல் நடத்தி, தொழிலாளிகள் தலையில் திணிப்பதென முடிவெடுத்தார்கள்.

தொழிலாளிகளுக்கும், முதலாளிகளுக்கும் இடையே இப்பிரச்சனை சம்பந்தமாக எழுந்துள்ள அபிப்ராய வித்தியாசங்களை ஒரு கமிட்டியில்தான் பேசித் தீர்க்கவேண்டுமெனவும், இக்கமிட்டியில் முடிவாகும்வரை, இருசாரரும் ஊதியக்குழு பரிந்துரைகள் சம்பந்தமாக தனியாக பேச்சுவார்த்தை நடத்தவோ அமுல்படுத்தவோ கூடாது என கூறி தமிழக அரசு ஒரு முத்தரப்புக் கமிட்டியின் முதல்கூட்டம் 25—11—71ந் தேதி சென்னையில்கூடி, சம்பளம், பஞ்சப்படி போன்ற 9 பிரச்னைகளில் டிசம்பர் 13, 14 தேதிகளில் கூடி ஒவ்வொன்றாகப் பேசி முடிப்பதுஎன முடிவெடுத்தது. இதன்படி முத்தரப்புக் கமிட்டி பணியாற்றினல் ஊதியக்குழு

(4-ம் பக்கம் பார்க்க)

# தீக்கதிர்

## உலக மக்களின் எதிரியை ஓட ஓட அடிப்போம்!

சுதந்திரத்தை நசுக்குபவர் யார்?சமாதானத்தையும் ஜனநாயகத்தையும் காலில் போட்டு மிதிப்பவர் யார்? எங்கும் பிணவாடையைப் பரவச் செய்பவர் யார்?

இந்தக் கேள்விகளுக்குப் பதில் எல்லோருக்கும் இப்போது தெளிவாகி விட்டது.

ஆசியாவில் தோல்வி தவிர்க்க முடியாதது என்பதைப் பார்க்க மறுக்கும் அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகள் பங்களா தேச சுதந்திரப் போராட்டத்தை நசுக்கி விட முடியுமென்ற நப்பாசையில் இந்தியத் துணைக் கண்டத்தில் மேலும் ஆதிக்கம் செலுத்தக் கிளம்பியுள்ளனர்.

இந்திய இராணுவத்தின் உதவியுடன் பங்களா தேச சுதந்திரப் போராட்ட வீரர்கள் ஆக்கிரமிப்புப் படைகளை அழித்தொழித்துக் கொண்டிருக்கின்ற நேரத்தில் யாகியாகான் அமைத்திருந்த ''சிவில் நிர்வாகமே'' ராஜினாமா செய்த பின்னர் அமெரிக்கா ஐ.நா. பாதுகாப்பு சபையில் 3வது முறையாக தீர்மானம் கொண்டு வருகிறது. இந்த யுத்தத்தை இந்தியா-பாக் விவகாரமாக்கி போர் நிறுத்தம் செய்யவேண்டும் என்றும் துருப்புகளைத் திரும்பப் பெற வேண்டும் என்றும் அத் தீர்மானம் கோருகிறது. அத் தீர்மானத்தில் பங்களா தேச சுதந்திரப் போராட்டத்தைப்பற்றி ஒரு வார்த்தை கூட இல்லை.

ஐ. நா. மேற்பார்வையாளர்களை நிறுத்தவேண்டும், இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கும் இடையே பேச்சு நடத்தவேண்டும் என்ற கோரிக்கையிலிருந்து அமெரிக்க அரசு பங்களா தேசப் போராட்டத்தை நசுக்க ஐ.நா.ஸ்தாபனத்தை நேரடியாகப்பயன்படுத்திக் கொள்ள மீண்டும் மீண்டும் முயன்றது. இதற்காக யுத்தநிலைமைக்கு முடிவு கட்டவேண்டும் என்று விரும்பிய பல நாடுகளின் ஆவலைப் பயன்படுத்திக்கொள்ள அது முயன்றது. இந்தச் சூழ்ச்சியை ஐ. நா. பாதுகாப்புச் சபையில் மூன்று முறை ரத்ததிகாரத்தைப் பிரயோகித்து சோவியத் யூனியன் தடுத்தது.

இந்த நிலையில் பொருளாதார உதவியைத் தடைசெய்து இந்தியாவின்மீது நிர்ப்பந்தம்கொண்டுவர அமெரிக்க ஏகாதிபத்திய வாதிகள் முயன்றனர். அதே சமயம் அமெரிக்க அரசு பாகிஸ்தானுக்கு வேறு நாடுகளின் மூலம் ஆயுதங்களை அனுப்பியது.

மேலும் வங்கக்கடலுக்கு 7-வது கப்பல்படையை அனுப்பி இந்தியாவை மிரட்டியது: ''சீட்டோ'' ''சென்டோ'' இராணுவ ஒப்பந்தங்களின் இரகசிய ஷரத்துக்களை அமுலாக்கப்போவதாகவும் பயமுறுத்தியது.

அமெரிக்க ஏகாதிபத்தியம் பங்களதேச மக்களுக்கும் இந்தியமக்களுக்கும் மட்டுமன்றி சுதந்திரத்தை விரும்பும் எல்லா மக்களுக்கும் எதிரி என்பது மீண்டும் நிரூபிக்கப்பட்டுள்ளது.

அமெரிக்க ஏகாதிபத்தியத்தைச் சார்ந்து நிற்கும் நிலையிலுள்ள அபாயத்தை மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி எப்போதும் எச்சரித்துவந்துள்ளது. ஏகாதிபத்திய வாதிகளின் ''உதவி'' யுடன் பிணைத்துக்கொள்ளும் இந்திய அரசின் தற்கொலைப்பாதையைப் பற்றியும்கடன்கள் கட்சிகூட்டு ஒப்பந்தங்கள் பற்றியும் அந்நிய மூலதனம் வருவது பற்றியும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் எச்சரித்துவந்துள்ளது.

இன்றைய நிகழ்ச்சிப் போக்கின் காரணமாக, பங்களாதேச—இந்திய மக்களிடம் அமெரிக்க ஏகாதிபத்திய வாதிகள் காட்டும் ஒளிவு மறைவற்ற வெறுப்பின் காரணமாக- அமெரிக்காவுடன் நெருங்கிய உறவை வளர்க்கவேண்டும் என்று இத்தனைநாட்களாகக் கூறி வந்தவர்கள்கூட இன்று உறுதியான அமெரிக்கஎதிர்ப்பு நிலை எடுக்கவேண்டிய அவசியம் ஏற்பட்டுவிட்டது இந்திய துணைக்கண்டத்தில் அமெரிக்க கொள்கைகளை ஏகபோகவாதிகளின் பத்திரிகைகளே கண்டித்துள்ளன. அமெரிக்காவைப் பகைத்துக்கொண்டு சோவியத் யூனியனுடன் நெருங்கிய உறவை ஏற்படுத்த முயற்சிப்பதாக இந்திய அரசாங்கத்தைக் கண்டித்தவர்கள் இன்று குரலை மாற்றும் விநோதத்தையும் இப்போது பார்க்கிறோம்.

இன்று இந்திய மக்கள் ஏகாதிபத்திய எதிர்ப்பு நிலையில் ஒன்றுபட்டுள்ளனர். கடந்த 8 மாத அனுபவம் யார் நண்பன், யார் விரோதி என்பதைக் காட்டி விட்டது.

அமெரிக்க ஏகாதிபத்யவாதிகளிடம் இந்திய மக்கள் சொல்வதைச் செய்யக்கூடியவர்கள் என்று காட்ட வேண்டிய சந்தர்ப்பம் வந்துள்ளது. ஏகாதிபத்தியவாதிகளின்கரங்கள் பங்களாதேசமக்களின் ரத்தத்தில்தோய்ந்துள்ளன யாகியாகானை நம்மீது யுத்தம் தொடுக்கத் தூண்டியதும் அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகளே! இனியும் நம் மக்களைக் கொள்ளையடிக்க அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகளை அனுமதிக்க முடியுமா? ஏகாதிபத்தியவாதிகளுக்குப் பாடம் புகட்ட வேண்டிய நேரம் வந்துவிட்டது.

அமெரிக்கக் கடன்களை யெல்லாம் இந்திய அரசு நிறுத்தி வைக்கவேண்டும். அமெரிக்க நிறுவனங்களை யெல்லாம் நாட்டுடைமையாக்க வேண்டும், சி. ஐ. ஏ. அமெரிக்க தகவல் நிலையம் போன்ற அமெரிக்க உளவு ஸ்தாபனங்களை யெல்லாம் வெளியேற்ற வேண்டும்.

இன்றே இப்போதே வெறிபிடித்த அமெரிக்க ஓநாய்களை வெளியேற்ற வேண்டும் என்பது இந்திய மக்களின் கோரிக்கையாகும்.

# பங்களா தேச விடுதலைப் போர்

## சுதந்திரம்-ஜனநாயகத்துக்கான ஏகாதிபத்திய எதிர்ப்புப் போரே

**இராணுவ சர்வாதிகாரி யாகியாகானின் கொடுங்கோலாட்சியினின்றும் விடுதலைபெற, பங்களாதேச மக்கள் நடத்திய வீரம் செறிந்த விடுதலைப் போராட்டத்தை, மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி முழுக்க முழுக்க ஆதரித்தது. பங்களாதேச சுதந்திர அரசை அங்கீகரிக்க வேண்டுமென்றும், போராடும் சுதந்திர வீரர்களுக்கு ஆயுத உதவி உட்பட அனைத்து உதவிகளும் செய்ய வேண்டுமென்றும் ஆரம்ப முதலே வலியுறுத்தி வந்தது.**

**மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் நிலையை, வலப்புறம் நின்று வலது சாரி திருத்தல்வாதிகளும், இடப்புறமிருந்து இடது சாரி அதி தீவிர வாதிகளும் தொடர்ந்து தாக்கி வருகிருர்கள்.**

**அவர்களின் வாதங்களில் எவ்வளவு பொய்யும் அவதூறும் இருக்கின்றது என்பதை கீழே விபரமாக விளக்குவோம்.**

திருத்தல்வாதிகள் நம்மைப் பற்றி என்ன குற்றம் சொல்லுகிருர்கள்? கடந்த 8 மாதகாலமாக, நமது கட்சியானது ஏதேதோ தத்துவங்களைப்பேசியும், அறிக்கைகளை வெளியிட்டும் வந்ததாகவும், சூழ்நிலைகளின் நிர்ப்பந்தத்தின் காரணமாக, அந்தத் தத்துவங்களையும் அறிக்கைகளையும் மாற்றிக் கொள்ள நேரிட்டிருப்பதாகவும்'' 'கலந்தர்' என்ற வலது கம்யூனிஸ்ட் ஆதரவுப் பத்திரிகை தனது 10-12-71 இதழில் எழுதியிருக்கிறது.

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியானது, எந்தத் தத்துவத்தை மாற்றிக் கொண்டது? எந்த அறிக்கையை மறுத்துப் பேசியது?... என்றெல்லாம் நாம் திருத்தல் வாதிகளைக் கேட்டு விடக்கூடாது. கேட்டு விட்டால், அவர்களின் நிலைமை இக்கட்டாக முடியும்!

### அதி தீவிர வாதிகள் கூறுவது என்ன ?

பங்களாதேஷ் மக்களின் போராட்டததை மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி ஆதரித்தது தவறு என்றும்- மேற்கு பாகிஸ்தானின் இராணுவ ஆட்சியாளர்களால் கட்டவிழ்த்து விடப்பட்ட ஆக்ரமிப்பை முறியடிக்க, இந்திய அரசு எடுததுக்கொண்ட நடவடிக்கைகளுக்கு ஆதரவு கொடுத்ததும் தவறு என்றும் இடது சாரி அதி தீவிர வாதிகள் குறை கூறுகிருர்கள்.

அதற்கு அவர்கள் கூறும் காரணம், பங்களாதேச மக்களின் போராட்டத்துக்கு தொழிலாளி வர்க்கம் தலைமை தாங்கவில்லையாம்! முதலாளிகளையும் நிலப்பிரபுக்களையும் கொணட ஒரு கட்சிதான் அந்தப் போராட்டத்துக்குத் தலைமைதாங்குகிறதாம! அப்படிப்பட்ட ஒரு நிலையில், பாகிஸ்தானின்ஆக்கிரமிப்பைஎதிர்க்க எடுத்துக்கொள்ளப்படும் நடவடிக்கைகளுக்கு, மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி ஆதரவு கொடுப்பதானது, ''இந்திய ஆளும் வர்க்கங்களுக்கு கைப் பொம்மையாக'' ஆவதாகுமாம்! இவர்கள்இப்படித்தான் சொல்லுவார்கள். இதில் ஒன்றும் ஆச்சரியமில்லை!

### வலதுகள் எப்படி?

திருத்தல்வாதிகளோ மார்க்சிஸ-லெனினிஸத்தைக் கைவிட்டவர்கள். இந்திரா காந்திக்கு பேண்டு வாத்தியக்காரர்களாக மாறி விட்டவர்கள். இந்திரா சர்க்காரின் கொள்கைகளுக்கு அங்கு மிங்கும் ஈன குரலில்முணுமுணுப்பு எதிர்ப்புதெரிவித்துக்கொண்டு இந்திரா சர்க்காரையே ஆதரித்துக் கொண்டும், முன்இழுத்துக் கொண்டும் செல்லுகிற வர்களாக ஆகி விட்டவர்கள். இந்த முணுமுணுப்பும் கூட, தங்களுடைய கட்சி அணிகளையும் பொதுமக்களையும் ஏமாற்றுவதற்காகத்தான்! மார்க்சிஸ— லெனினிஸத்தை அடிப்படையாகக் கொண்ட ஒரு தொழிலாளி வர்க்கக் கட்சியின் அவசியத்தைப் பற்றி அவர்களால் புரிந்து கொள்ள முடியாது. ஆளும் வர்க்கங்கள், ஒரு குறிப்பிட்ட சந்தர்ப்பத்தில், நிர்ப்பந்த சூழ்நிலையின் காரணமாக —ஒரு கொள்கையையோ அல்லது ஒரு நடவடிக்கையையோ மேற்கொள்ள வேண்டிய நிலைமை ஏற்படுகின்றபோது— அதனுல், அந்த ஆளும் வர்க்கங்களின் சொந்த சுய நலன்களைக் காட்டிலும் ஜனநாயக சக்திகளுக்கும் சமுதாய முன்னேற்றத்திற்கும் உதவியாக உள்ளது என்ற முறையில்— அந்தக் கொள்கையையோ அல்லது அந்த நடவடிக்கையையோ ஆதரிக்க வேண்டிய சமயத்திலும் தனக்கும் ஆளும் வர்க்கங்களுக்கும் இடையே கோடு கிழித்துக் கொள்ள வேண்டாமா? தொழிலாளி வர்க்கத்தின் கருத்தோட்டத்தை எடுத்துச் சொல்ல வேண்டாமா? இந்த அவசியத்தை திருத்தல்வாதிகளால் புரிந்துகொள்ள முடியவில்லை.

### ஓயாப்புரட்சியாளர்

எதற்கெடுத்தாலும் உடனுக்குடன் புரட்சி செய்ய வேண்டுமென்ற கொள்கையில் மூழ்கிக் கிடக்கும் அதிதீவிரவாதிகள், சமீப ஆண்டுகளில் இந்த உபகண்டத்தில் நடந்த முக்கியமான வளர்ச்சிப் போக்கில், பங்களா தேச மக்களின் போராட்டம் மிகவும் முக்கியமானது என்பதைப் புரிந்து கொள்ள முடியாது. சர்வதேச ரீதியில் ஏகாதிபத்யத்துக்கு எதிராக நடைபெறும் போராட்டத்தின் முக்யத்துவத்தை அவர்களால் புரிந்து கொள்ள முடியாது. உலகப் புரட்சிக்கு இந்தப் போராட்டத்தால் ஒரு பயனுமில்லை யெனஇவர்கள் கருதுகிருர்கள் இதற்கு, இந்தப் போராட்டத்திற்குத் தலைமைவகிப்பவர்கள் முதலாளிகளும் நிலப்பிரபுக்களுமாக இருக்கிருர்கள் என்றும் காரணம்கூறுகிருர்கள்மேலும், இந்தப் போராட்டத்துக்கு இந்தியாவின் முதலாளித்துவ- நிலப்பிரபுத்துவ அரசாங்கம் ஆதரவு கொடுப்பதையும் தங்கள் போக்குக்கு ஆதாரமாகக் காட்டுகிருர்கள்.

வலது திருத்தல்வாதிகளும் சரி, இடது அதி தீவிரவாதிகளும் சரி, இருவரும்ம, தனனேக்குப் பார்வையிலே இருப்பதால், பங்களாதேச மக்களின் போராட்டத்தைச் சரியான முறையில் கணிக்க முடியாதவர்களாகவும், இப்பிரச்னையில் தொழிலாளி வர்க்க நிலை என்ன என்பதை முன்வைக்க முடியாதவர்களாகவும் இருக்கிருர்கள். தங்களுடைய இந்த ஞானசூன்யத்தை மறைக்கும் முயற்சியில் இறங்கியுள்ள இவர்கள், மார்க்சிஸ்ட்—லெனினிஸ்ட் கொள்கையை உறுதியாகப் பின்பற்றிவரும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியை வெறுமனே தாக்குவதில் மூழ்கிக் கிடக்கிருர்கள்.

### வேடிக்கை பார்ப்பதா?

பங்களா தேசப் போராட்டத்தின் முக்கியத்துவத்தைப் பார்க்க வேண்டும். இந்தியாவிலுள்ள சகல வர்க்கங்களும் இந்தப் போராட்டத்தை ஆதரிக்கின்றன என்பதையும்— இந்த ஆதரவுப் போராட்டத்தில் ஆளும் வர்க்கங்கள் மாத்திரமே தலைவனாக விளங்குகிறது என்று காட்டிக் கொண்டிருக்கின்றன என்பதையும்— இப் பிரச்னையில், தொழிலாளி வர்க்கத்தின் கட்சியானது, தன்னுடைய தனித் தன்மையான நிலை என்ன என்பதை விளக்க வேண்டுமென்பதையும்— அதற்காக மக்களைத் திரட்ட வேண்டுமென்பதையும் அவசியமாகக் கருத வேண்டுமல்லவா! அதாவது, பங்களாதேச மக்கள் வெற்றியடைந்த பிற்பாடு, அவர்களின் முன்னே திறந்து கிடக்கும் பாதையை, தொழிலாளி வர்க்க லட்சியப் பாதையாக ஆக்கவேண்டுமென்ற கருத்தோட்டத்துடன், இப் போராட்டத்துக்கு ஆதரவு கொடுக்க வேண்டியது அவசியமல்லவா!

### ஆரம்ப முதலே வற்புறுத்தினேம்

பங்களாதேச மக்களின் விடுதலைப் போராட்டம் ஆரம்பமானது முதலே, அதன் சுதந்திரப் போராட்ட வீரர்களுக்கு மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி முழு ஆதரவும் கொடுத்தது. இந்திய சர்க்காரின் கைகளை ஏகாதிபத்தியங்கள் திருகிமுறுக்கிக்கொண்டிருந்ததின் விளைவாக, இந்திய சர்க்கார் பங்களாதேசத்தை அங்கீகரிக்காமல் ஊசலாடிக் கொண்டிருந்த காலத்தில், பங்களாதேச சுதந்திர சர்க்காரை அக்கீகரிக்க வேண்டுமென்றும், அனைத்து உதவிகளும் வங்காள சுதந்திரப் போராட்ட வீரர்களுக்கு அளித்திட வேண்டுமென்றும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி மாபெரும்கிளர்ச்சிகளில் ஈடுபட்டது.

### மாறியது யார்?

இதில் கொள்கையை மாற்றிக் கொண்டவர்கள் யார் என்று வலது கம்யூனிஸ்ட்களைக் கேட்கிருேம். பங்களாதேச சுதந்திர அரசை இந்திய அரசு அங்கீகரித்ததா? அதன் சர்வதேச ஆதரவாளர்கள் அங்கீகரித்தனரா? இல்லையே! அங்கீகரிக்க மறுத்த அவர்களை வலது கம்யூனிஸ்டுகள் கண்டித்தனரா? இல்லையேஇல்லையென்பது மட்டுமல்ல. தங்களுடைய எஜமானர்களின் டாட்டுக்கு ஏற்றவாறு வாத்தியமும் வாசித்துக் கொண்டிருந்தார்கள். அப்புறம்தானே, அங்கீகரித்தார்கள்! அப்புறம் தானே வலது கம்யூனிஸ்ட் கட்சியும் ஆர்ப்பரித்துப் பேசிற்று! ஏதோ மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சிதான் தனது நிலையை மாற்றிக்கொண்டதாகக் கூறிகிறீர்களே, இது நிஜந்தானு?

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி, பங்களாதேச மக்களின் போராட்டத்தை முழுக்க முழுக்க ஆதரித்தது ஏன் என்று தெரியுமா? இடது அதி தீவிர வாதிகளால், இதைப் புரிந்து கொள்ள முடியாது. காரணம், இதில் பொதிந்து கிடக்கும் உண்மையான, பிரச்னைகளைப் பற்றி அவர்களுக்கு அக்கறை கிடையாது.

—தொடரும்

## சிம்சன் தொழிலாளர்கள் மீது திட்டமிட்ட தாக்குதல்

சென்னை, டிச. 18 — தி. மு. க. முதலமைச்சர் திரு. கருணுநிதியின் உறுதி மொழியின் காரணமாக, டிசம்பர் 16-ம் தேதி காலை சிம்சன் தொழிலாளிகள் வேலைக்குத் திருப்பினர். செம்பியத்தில் உள்ள சிம்சன் குரூப் தொழிற்சாலையில் வேலைக்குச் சென்ற தொழிலாளிகளை தி.மு க. குண்டர்கள் சைக்கிள்செயின், கத்தி போன்ற ஆயுதங்களைக்கொண்டு தாக்கினுர்கள். சுமார் 200 குண்டர்கள் ''காட்டூர் கோபால் வாழ்க'', ''பேரவை வாழ்க'' என்று சொன்னுல்தான் உள்ளே அனுமதிப்போம் என்று கூறி, அவ்வாறு கூற மறுத்தவர்களை தாக்கியுள்ளார்கள்.

செம்பியம் எஸ்டேட்டில் உள்ள கான்டீனில் 200 குண்டர்கள் பயங்கர ஆயுதங்களுடன் உள்ளேவரும் தொழிலாளிகளைத் தாக்குவதற்குத் தயாராக இருந்தனர். மேலும் சில லாரிகளில் கற்களும் தயாராக வைக்கப்பட்டிருந்தது. இதைப் பற்றி எடுத்துக்கூறி தொழிலாளிகள் நிர்வாகத்தினரிடம் பாதுகாப்புக்கோரியும் நிர்வாகம் வாளாயிருந்தது.

பயங்கரமான தாக்குதலும், இழிவான வார்த்தைகளும், ஏசல்களும் போதாதென்று முன்னறிவிப்பு ஏதுமின்றி போலீசார் தொழிற்சாலைக்குள் புகுந்து கண்ணீர்ப்புகைப் பிரயோகம் செய்தனர். பல தொழிலாளிகள் பலத்த காயங்களுடன் ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டிருக்கிருர்கள்.

இத்தகைய காட்டுமிராண்டித்தனத்தை எதிர்த்து சிம்சன் குரூப் தொழிலாளிகள் அனைவரும் உள்ளிருப்பு வேலை நிறுத்தம் செய்து வருகின்ருர்கள்.

தொழிலாளர்களுக்கு தக்க பாதுகாப்பு அளிக்கப்படும் என்று உறுதிமொழி தந்த முதலமைச்சர் இவ்வாறு காட்டுமிராண்டித்தனம் நடந்திருப்பதற்கு என்ன பதில் கூறப்போகிருர்? அவரால் காலிகளைக் கட்டுப்படுத்த முடியவில்லையா என்று தொழிலாளர்கள் கேட்கிருர்கள்.

தமிழகம் ''அமைதிப் பூக்காடா'' அல்லது காட்டூர் கோபால் குண்டர்கள் நடமாடும் சாக்காடா? கொடுத்த வாக்குறுதியைக் காப்பாற்ற வேண்டும் என்று அனைத்துத் தொழிலாளரும் கோருகின்றனர். கழக முதல்வரின் பதில் என்ன?

## ஆசிரியருக்கு வரையும் மடல்

### கக்கூஸ்களில் கதவு இல்லை

ஐயா,

மதுரை மாநகராட்சியின் பொதுக் கக்கூஸ்களில், சில அறைகளில் 2 கதவுகளும் இல்லை; மற்றும் சில அறைகளில் ஒரு கதவு இல்லை.

மேலும், பல அறைகளில் மலங்கழிக்கும் தட்டுகள் பழுது பட்டுக் கிடக்கின்றன. குழாய்களும் சரிவர இல்லை. லைட்டுகளும் இல்லை.

கக்கூஸ் மோசமாக இருப்பதால், காலரா, பேதி நோய்களும் வருகின்றன. மாலை மரியாதை வாங்கி காலம் கழிப்பதையே கௌரவமாகக் கொண்ட மாநகராட்சித் தலைவரும் அதிகாரிகளும் இதில் கவனம் செலுத்துவார்களா?

இப்படிக்கு,

பொதுக் கக்கூஸ் தவிர
வேறு போக்கிடமில்லாத
பொன்னுச்சாமி,
மதுரை

## கோவை தாலுகாவில்
## கட்சி நிதியளிப்பு கூட்டங்கள்

கோவை, டிச. 18— கோவை தாலுகா வடக்குப் பகுதி சிவானந்தபுரத்திலும், சிங்காநல்லூர் உப்பிலிபாளையத்திலும் கொட்டும் மழையில் தோழர் இ. எம் எஸ். அவர்களுக்கு தொழிலாளர்களும், பொதுமக்களும் உற்சாகமான வரவேற்பு அளித்து, கட்சி நிதிக்காக ரூ 236—71ம் கொண்ட பண முடிப்பு அளித்தனர்.

மதுரையில் நடக்கும் கட்சி மாநாடு யுத்த நெருக்கடியால் ஒத்திவைத்த போதிலும் கட்சி நிதி வசூல் செய்வதிலும் மாநாட்டுப் பிரச்சாரம் நடத்துவதிலும், தோழர்கள் மத்தியில் உற்சாகம் குறையவில்லை. மாவட்ட கமிட்டியால் நிர்ணயிக்கப்பட்ட கோட்டாவை நிறைவேற்றி தோழர்கள் உற்சாகமாக நிதி வசூல் திரட்டும் பணியில் ஈடுபடடுள்ளனர். கோட்டாவை நிறைவேற்றி மேலும் அதிக தொகையை பணமுடிப்பாக கொடுத்தனர்.

டிச. 15-ம் தேதி மாலை தோழர் இ. எம். எஸ். நம்பூதிரி பாட்டுடன் தோழர்கள் கே. ரமணி, ஆர். வெங்கிடு, டி. பாலன் ஆகியோர்கோவை தாலுகா வடக்கு கமிட்டியால் சிவானந்தா புரத்தில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்த நிதியளிப்பு கூட்டத்திற்கு பங்கு கொண்டனர். அங்கு செல்லும் பொழுது கொட்டும் மழை ஆரம்பித்தும் ஆயிரக்கணக்கான மக்கள் நின்று உற்சாகமான வரவேற்பு அளித்தனர். 9-வது கட்சி காங்கிரசை யொட்டி ஒன்பது அதிர்வேட்டுகள் விட்டனர். இதை தொடர்ந்து அங்கு நடைபெற்ற கூட்டத்திற்கு கோவை தாலுகா வடக்கு கமிட்டியின் செயலாளர் தோழர் பி. நடராஜன் தலைமை வகித்தார். தோழர் இ. எம். எஸ். நம்பூதிரிபாட் கோவை தாலுகா வடக்கு கமிட்டியின் சார்பாக ரூ. 1507—71-ல், கோவை தாலுகா தெற்கு கமிட்டியின் சார்பாக ரூ. 276-ம் ஆக ரூ. 1783—71 நிதியளிப்பு கொடுத்தனர்.

இந்த நிகழ்ச்சி முடிந்ததும் மாலை 7-30 மணியளவில் சிங்காநல்லூர் உப்பிலிபாளையத்தில் நடைபெற்ற நிதியளிப்பு கூட்டத்திலும் தோழர் இ. எம். எஸ். பங்கு கொண்டார். அங்கும் கடுமையான மழை பெய்ய ஆரம்பித்துவிட்டது. ஆயிரக்கணக்கில் மக்கள் திரண்டு இ. எம். எஸ். அவர்களுக்கு உற்சாகமான வரவேற்பு அளித்தனர்.

அங்கு நடைபெற்ற கூட்டத்திற்கு சிங்காநல்லூர் நகர் கமிட்டி செயலாளர் தோழர் எஸ். இருளப்பன் தலைமை வகித்தார். சிங்காநல்லூர் நகர் கமிட்டியின் சார்பாக ரூ. 585—00 நிதியளித்தனர். சிவானந்தாபுரம், உப்பிலிபாளையம் ஆகிய இரு கூட்டங்களிலும் தோழர் இ.எம்.எஸ். நம்பூதிரிபாட் விரிவுரையாற்றினர்.

### அவனியாபுரத்தில்
## சர்வகட்சி கூட்டம்

அவனியாபுரம், டிச.18— மதுரை தெற்கு தாலுகா அவனியாபுரம் கிராமத்தில் பங்களாதேச விடுதலை போராட்டத்தை ஆதரித்து அனைத்துக் கட்சி ஊர்வலம் நடைபெற்றது.

டிசம்பர் 16 தேதி மாலையில் தோழர் கே. சுப்பையா (மார்க்சிஸ்ட்) தலைமையில் கொட்டும் மழையிலும் யாகியாகான் கொடும்பாவி கட்டி ஊர்வலத்தில் இழுத்துச் சென்று இறுதியில் கொழுத்தப்பட்டது.

பின்னர் நடந்த பொதுக் கூட்டத்திற்கு தோழர் கே.சுப்பையா தலைமை வகித்தார்.

திருவாளர்கள் பொன்னையா, பிச்சை(தி.மு.க,), பொன்ராமு(ஸ்தா.காங்), நடராசன் (புது.காங்), முத்துசேர்வை (பா.பி), ரரமலிங்கம் (வலது. கம்), ராமலிங்கம் (கிராமம்) ஆகியோர் பாகிஸ்தான் நடவடிக்கையைக் கண்டித்தும் அமெரிக்க ஏகாதிபத்தியமிரட்டலைக் !கண்டித்தும் பேசினர்.

## வைகையில் மூழ்கித் தப்பிய ஹெலிகாப்டர் விமானி பேட்டி!

மதுரை, டிச., 18— மதுரை வைகை வெள்ளத்தில் சிக்குண்டவர்களை மீட்கும் போது விபத்திற்குள்ளானவர் ஹெலிகாப்டர் விமானத்தின் விமானி காப்டன் பி. எஸ். ராவ்.

காப்டன் ராவை மீட்பதில் சர்க்கார் இயந்திரம் முழுவதும் ஈடுபடுத்தப்பட்டது. அச்சம்பத்து கிராமத்தைச்சேர்ந்த கொத்துவேலை பார்க்கும் காத்தான் என்பவர்தான்காப்டன் ராவைக் காப்பாற்றி கரை கொண்டுவந்து சேர்த்தார்.

ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டுள்ள காப்டன் ராவை பத்திரிகையாளர்கள் பேட்டி கண்டபோது அவர் தெரிவித்ததாவது:—

''பெரியபாலத்திற்குக் கிழக்குப்புறமுள்ள பகுதியில் ஒரு குடிசைக்கூரையின் மேல்நின்று கொண்டிருந்தவர்களை மீட்ட பிறகு ஆற்றின் மத்தியில் மேடான பகுதியில் நின்றுகொண்டிருந்த மூவரை மீட்க மறுபடியும்பறந்துசென்றேன். இரண்டு பேரை மீட்ட பிறகு மூன்ருவதாகவுள்ள ஒரு ஸ்திரீயையும் மீட்க முயன்றேன். இரண்டு தடவை தவறி அந்த ஸ்திரீ ஆற்றில் விழுந்துவிடவே மூன்ரும் தடவையும் மீட்க முயன்றேன். திடீரென ஹெலிகாப்டர் வெள்ளத்தண்ணீரில் சிக்கி விட்டதை உணர்ந்தேன். ஒரு கணம் ஒன்றும் புலப்படாமல் இருந்துவிட்டு என் பக்கத்து கதவைத் திறந்தேன். ஆனுல் நகரமுடியவில்லை. பெல்ட்டு மாட்டியிருந்ததை அகற்றவில்லை யென்பது நினைவிற்கு வந்தது. பிறகு பெல்டை அகற்றிவிட்டு ஹெலிகாப்டருக்கு வெளியே வந்து நீந்தினேன்'' என்ருர்.

காயம் எதுவுமின்றி உயிர் தப்பிய காப்டன் ராவ் வைத்திய பரிசோதனைக்காக ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டார்.

காப்டன் ராவ் 1958 க்கு முன்பே விமான லைசென்ஸ் பெற்றவர். 1958லிருந்து 1966வரை விமானப்படையில் சேவை செய்துவிட்டு தனிப்பட்ட கம்பெனிகளில் சேவை செய்து வருகிருர். ராஜமுந்திரியைச் சேர்ந்த இவர் தனது குடும்பத்துடன் ஹைதராபாத்தில் வசித்து வருகிருர். இவருக்கு இரு மகன்களும், ஒரு மகளும் இருக்கின்றனர்.

# ஏகாதிபத்தியச் சதியை முறியடிப்போம்!

## 14 நாள் போரில் 2307 பேர் இறந்தனர்

### இந்தியத் தரப்பு சேதம் பற்றி தகவல்

புதுடில்லி. டிச. 19— இந்தியா பாகிஸ்தானுக்கிடையேயான 14 நாள் போரில் கிழக்கு, மேற்கு அரங்கங்களில் 2,307 இந்திய வீரர்கள்பலியானுர்கள்; 6,163 பேர் காயமடைந்தனர் என்று கடைசியாகக் கிடைத்த தகவல்கள் தெரிவிக்கின்றன.

காணுமற்போன இந்திய வீரர்களின்எண்ணிக்கை2,163 இத்துடன் நமது வீரர்களின் சேதம் 10,633 ஆகும்.

கிழக்கு, மேற்கு அரங்கங்களின் சேத விவரம் வருமாறு:

| | |
|---|---|
| **உயிரிழந்தவர்கள்** | |
| கிழக்கு | 1021 |
| மேற்கு | 1286 |
| மொத்தம் | 2,307 |
| **காயம்** | |
| கிழக்கு | 2,915 |
| மேற்கு | 3,248 |
| மொத்தம் | 6,163 |
| **காணுமற் போனவர்கள்** | |
| கிழக்கு | 89 |
| மேற்கு | 2,074 |
| மொத்தம் | 2,163 |

## இது வரை 37 ஆயிரம் மே. பாகிஸ்தான் துருப்புக்கள் சரண்! ஆயுதங்களை ஒப்படைந்தனர்

புதுடில்லி, டிச. 19— டாக்காவில் 1000 பாக். ராணுவ அதிகாரிகள் உட்பட 2400 மேற்கு பாக். துருப்புகள் இந்திய வீரர்களிடம் சரணடைந்தன என்று இன்று அதிகாரபூர்வமாக அறிவிக்கப்பட்டது.

பாக்.படை சாணுகதி பற்றி இதர பகுதிகளிலிருந்து டில்லிக்கு கிடைத்துள்ள தகவல்கள் வருமாறு:

சையத்பூர் பகுதியில் 7டாங்குகளுடன் 5000 பாக். துருப்புகள் சரணடைந்தன.

ரங்க்பூரில் 15 அதிகாரிகள், ஜுனியர் அதிகாரிகள் உட்பட 345 பாக். துருப்புகள் சரணடைந்தன.

பங்களாதேசில் பாகிஸ்தானின் கப்பற்படை தலைமை அதிகாரி ரியர் அட் மிரல் மகமது ஷரீப் டாக்காவில் நேற்று சரணடைந்தார்

சிட்டகாங்கில் பாக். கப்பற்படை பொறுப்பு அதிகாரி கம்மோடர் கே.எம். ஹுசைன் உட்பட 98 பாக். கடற்படையினர் சரணடைந்தனர். சிட்டகாங் போர்ட் டிரஸ்ட்மானேஜிங் டைரக்டர் கம்மோடர் ஐ. எச். மாலிக் சரணடைந்தார். 98 போர்களில் 3 காப்டன்கள், 3 கமாண்டர்கள்,13 லெப்டினன்ட் கமாண்டர்கள், 64 லெப்டினன்ட், சப்லெப்டினன்ட்.

வங்காள தேச வடமேற்குப் பகுதியில் இந்திய வெற்றிவீரர்களிடம் பாக். 16வது காலாட்படை டிவிஷன் தலைவர் மேஜர் ஜெனரல் நஸீர் ஹுஸைன் ஷா உள்பட 6000க்கு மேற்பட்ட பாக். துருப்புகள், ஆயுதங்களை ஒப்படைத்து சரணடைந்தன.

## யாகியா பேசாதது ஏன்?

புதுடெல்லி, டிச. 18— பகிஸ்தான் அதிபர் யாகியாகான் நேற்று இரவு 7-மணிக்கு வானொலியில் பேசுவதாக இருந்த நிகழ்ச்சி நடைபெறவில்லை.

அவர்பேசுவதாக அறிவிக்கப்பட்டிருந்த நேரத்தில் இன்னிசை நிகழ்ச்சி ஒலிபரப்பப்பட்டது.

அவரது பேச்சு ரத்து செய்யப்பட்டதா? ஏன் பேசவில்லை என்று காரணம் ஏதும் தெரியவில்லை.

## சிகரெட் புகையால் குழந்தைகளுக்கு நேரும்தீங்குகள்

### சோவியத் விஞ்ஞானி கருத்து

மாஸ்கோ, டிச, 19— ஒருவர் பிடிக்கும்போது சிகரெட் புகையிலுள்ள மொத்த நிக்கோடினில் 20 சதவிகிதத்தை உள்ளிழுக்கிருர். சிகரெட் எரியும் போது 30 சதவிகிதம் அழிக்கப்பட்டுவிடுகிறது அல்லது சிகரெட் துண்டில் எஞ்சி விடுகிறது; நிக்கோடினில் பெரும்பகுதி அதாவது 50 சதவிகிதம் புகைபிடிப்பவர் வசிக்கும், பணியாற்றும் இடத்திலிலுள்ள காற்றை நச்சுப்படுத்துகிறது. பல சந்தர்ப்பங்களில் குழந்தைகளும் இந்தக் காற்றை சுவாசிக்க வேண்டியிருக்கிறது. குழநதை பிறப்பதற்கு முன்பே அதன் நொய்மையான உடல் நிக்கோடினுல் பாதிக்கப்படலாம். கர்ப்பிணியான தாய், புகையிலைப் புகையால் நச்சுப்படுத்தப்பட்ட காற்றைச் சுவாசித்தாலோ அல்லது அவளே புகைபிடிப்பவளாக இருந்தாலோ அவளது இரத்தத்தின் மூலம் இது நேரிடக்கூடும். நிக்கோடின். நச்சுக்கொடி மூலமாக முதிர் கருவின்இரத்தத்திற்குள்சென்று அதனைவிஷப்படுத்துவதோடு அதன் இயல்பான வளர்ச்சியையும் தடைசெய்கிறது என்று சோவியத் விஞ்ஞானி ஏ. ஐ. ஒசிப்போவ் கூறுகிருர்.

நிக்கோடின் பள்ளிக் குழந்தைகளுக்கும் கெடுதலானது. சிறு வயதிலேயே புகைபிடிக்க ஆரம்பித்து விடுபவர்கள் ஞாபக மறதியாலும் எதிலும் மனம் ஊன்றி வேலை செய்யமுடியாமலும் அவதியுறுகின்றனர். அவர்களது தசைநார்கள் பலவீனமடைகின்றன. சிறுவயதில் புகை பிடிப்பவர்களுக்கு பலவீனமான தசைநார்கள் காரணமாக வளர்சிதை மாற்றக் கோளாறுகள் ஏற்படுகின்றன. புகை பிடிக்காத சிறுவர்களுடன் ஒப்பிடுகையில் புகைபிடிக்கும் சிறுவர்கள் குறிப்பிடத்தக்க அளவு மெலிந்து விடுகிருர்கள். அவர்கள் இயல்பாக வளச்சியடைவதும் இல்லை என்று அவர் கூறுகிருர்.

புகை பிடிக்கும் இடங்களில் வசிக்கும்குழந்தைகள் சரிவரத்தூங்குவதில்லை அவர்களுக்குப்பசிகுறைவதோடு, அமைதியற்றும் காணப்படுகிருர்கள்.குடல்கோளாறுகள் அடிக்கடி தோன்றுகின்றன.உள்ளிழுக்கப்பட்டநிக்கோடினுடன்கார்பன் மானுக்சைடுஇரத்தத்தின்ஹிமோகுளோபினுடன் சுலபமாகக் கலந்து விடுகிறது. இதனுல் அது ஆக்ஸிஜனுடன்சரிவரச்செறிவடைவதில்லை. இதனுல் அது வாய், வளரும் உடம்பின் திசுக்களுக்குமுறையான போஷாக்குக் கிடைக்காமல் போய் விடுகிறது. இதே போல் நிக்கோடின் மூளையையும் பாதிக்கிறது.

## ஐ. நா. கவுன்சில் ஸ்தம்பித்தது!

நியூயார்க், டிச. 18— டாக்காவின் வீழ்ச்சியும், மேற்கு முனையில் போரை நிறுத்த இந்திய அரசு உத்தர விட்டிருக்கிறது என்ற அறிவிப்பும் சற்றும் எதிர்பாராத செய்திகளாக வந்து ஐ. நா. பந்தோபஸ்து கவுன்சிலைத் தடுமாறவைத்துவிட்டன! இந்திய-பாக். போர் நிலைமை அடியோடு மாறிப்போனதால் இதுவரையுள்ள தீர்மானங்கள் பயன்படாதவையாகி இனி என்ன செய்யவேண்டும் என்ற குழப்பம் ஏற்பட்டு கவுன்சில் கூட்டம் நேற்றுப் பகல் முழுவதும் செயலற்றுப் போய் விட்டது!

கவுன்சில் கூட்டம் நேற்று துவங்கியவுடன், வங்க தேசத்தில் போர் நின்று விட்டது.பிரதமர் இந்திரா காந்தி போர் நிறுத்த உத்தரவிட்டிருக்கிருர் என இந்திய வெளி விவகார மந்திரி திரு. சுவரண்சிங் அறிவித்தார்.

புது நிலைமைஉருவாகிவிட்டதால், இது வரை பந்தோபஸ்துக் கவுன்சிலில் சமர்ப்பிக்கப்பட்டதீர்மானங்கள்அனைத்தும் பொருளற்றவையாகி விட்டன என்றுசோவியத்பிரதிநிதி திரு. ஜாகப் மாலிக் எடுத்துக் காட்டினுர். சோவியத் யூனியன் சமர்ப்பித்த பிரேரணை, பிரிட்டனும் பிரான்சும் கூட்டாக சமர்ப்பித்த பிரேரணையுட்பட மொத்தம் 6 தீர்மானங்கள் பந்தோபஸ்துக் கவுன்சில் முன்னர் இருக்கின்றன.

கவுன்சிலின் காலைக் கூட்டத்தை பகிஷ்கரித்த பாகிஸ்தான் பிரதிநிதிகள் பிற்பகல் கூட்டத்தில் கலந்து கொண்டனர்.

இந்தியாவின் போர் நிறுத்த அறிவிப்பைக் கேட்டு தமக்கு ''கவலை நீங்கியது'' என்று இத்தாலியப் பிரதிநிதி திரு. பியர் ரோவின்சி கூறினுர்.

இப்பொழுது போரை நிறுத்திய இந்தியா, ஐ. நா. மகாசபை கூறியபொழுதே போரை நிறுத்தாமலிருந்தது வருந்தத்தக்கது என்று சோமாலி பிரதிநிதி திரு ஃபாரா குறை கூறினுர்

தானுகவே போரை நிறுத்த இந்தியா முன் வந்திருப்பது உருப்படியான நடவடிக்கை. போர் நிறுத்தப்பட்டால் மற்ற விஷயங்களைப் பிறகு விவாதித்துக் கொள்ளலாம் என்று திரு சுவரண் சிங் சொன்னுர்.

### அதிகாரிபோல் நடித்து

## ரூ. இலட்சம் வழிப்பறி!

சென்னை, டிச. 19— பெங்களூரில் பட வினியோகத் தொழிலிலிருக்கும்இருவட இந்திய தொழிலதிபர்கள் ஏமாற்றப்பட்டு அவர்களிடமிருந்து ரூ. 1லட்சத்து 5ஆயிரம் பிடுங்கப்பட்டுள்ளது.

இரு தொழிலதிபர்களும் சென்னை வந்தனர். டிசம்பர் 4-ந் தேதி ஒரு டாக்சியில் சென்றபோது அங்கு வந்த இரு மோசடிப் பேர்வழிகள் அவர்களைத் தடுத்து நிறுத்தினர். வருமான வரி அதிகாரிகள் போல் நடித்துக்கொண்டு மோசடிப் பேர்வழிகள் சோதனை செய்ய ஆரம்பித்தனர்.

அப்போது தொழிலதிபர் பெல்டில் மறைந்து வைத்திருந்த கரன்சி நோட்டுக்களையும் மோசடி பேர்வழிகள் கைப்பற்றினர். பின்னர் டாக்சியை வருமான வரி அலுவலகத்துக்கு ஒட்டுமாறு கூறினர். வழியில் அவர்கள் இறங்கிப் போய் விட்டனர்,

பின்னர் தனராஜ்(23), கிருஷ்ணமூர்த்தி(43) ஆகியோரைக் கைது செய்து ரூ.63,300 ரொக்கத்தை கைப்பற்றி உள்ளனர். ரூ. 20 ஆயிரம் மதிப்புள்ள அம்பாசிடர்காரையும் போலீஸ் கைப்பற்றியுள்ளது.

## திருப்பூரில் ராமமூர்த்தி முழக்கம்

திருப்பூர், டிச. 19— திருப்பூர் டவுன்ஹால்மைதானத்தில் கூடியிருந்த5000த்துக்கு மேற்பட்டமக்கள் கூட்டத்தில் தோழர் ராமமூர்த்தி அமெரிக்க ஏகாதிபத்தியத்தின் சதிகளை அம்பலமாக்கினுர். மதுரையில் நடக்கவிருந்த மார்க்சிஸ்ட் கட்சிமாநாட்டுக்கு திருப்பூர் கட்சிக் கமிட்டி திரட்டியிருந்த நிதி ரூ. 2482- முதல் தவணையாக ராமமூர்த்தியிடம் கூட்டத் தலைவர் காளியப்பன் வழங்கினுர். நிதி வழங்கிய கட்சித் தோழர்களுக்கும், பொது மக்களுக்கும் நன்றிகூறி தோழர் ராமமூர்த்தி பேசியதாவது:—

### 10 லட்சம் மக்களை சுட்டுக் கொன்றனர்

மதுரையில் நடக்கவிருந்த கட்சி மாநாடு யுத்தம் காரணமாக ஒத்திவைக்கப்பட்டுள்ளது. இந்த யுத்தம் பாகிஸ்தானிய ராணுவ வெறியர்களால் நம்மீது திணிக்கப்பட்டுள்ளது. இந்தியா இதற்குக் காரணமல்ல. பங்களாதேஷ் மக்கள் ராணுவ சர்வாதிகாரப் பேயாட்சியை எதிர்த்து நீண்டகாலமாகப் போராடி வந்தார்கள். வீரம்செறிந்த அவர்களது போராட்டம் சர்வாதிகாரி அயூப்கானைவீழ்த்தியது. பிறகு வந்த யாகியாகான், மக்களுக்கு தேர்ந்தெடுக்கப்பட்ட அரசமைக்க சுதந்திரம் கொடுப்பதாய்க்கூறினுர். தேர்தலில் மக்களின் நம்பிக்கைக்குப் பாத்திரமான அவாமிலீக் கட்சி பூரண வெற்றி பெற்றது. முஜிபுர் ரகிமான் தலைமையில் அரசமைக்க விடும்படிக்கோரினர். பாகிஸ்தான் என்ற நாட்டை மத அடிப்படையில் அமைத்து ஆட்சி செய்து வந்த முஸ்லீம் லீக் கட்சி உள்பட அனைத்துக் கட்சிகளும் படுதோல்வியடைந்தன, மக்களின் தலைவர் முஜீபுர்ரகிமான் கட்சி ஒன்றே மாபெரும் வெற்றியடைந்ததைக்கண்ட ராணுவ ஆட்சியாளர்கள் மக்களுக்குக் கொடுத்த வாக்குறுதியை காற்றில் பறக்க விட்டனர். அதிகாரத்தைக் கொடுக்கவோ, அரசமைக்கவோ அனுமதிக்கவில்லை. மக்கள் கொதித்தெழுந்தனர். ஒத்துழையாமை இயக்கம் ஆரம்பிக்கப்பட்டது. நீதிபதிகள் முதல் கீழ்மட்ட அரசு ஊழியர்கள் வரை போராட்டத்திலிறங்கி அரசுயந்திரம் ஸ்தம்பித்துவிட்டது. வேறுவழியின்றி சமரசம் பேசுவதற்கு யாகியாகான் வந்தார். முஜிபூர் ரகிமானைக்கண்டு பேசினுர், பேச்சு வார்த்தைகள் நடக்கும்போதே மேற்கு பாகிஸ்தானிலிருந்து 90,000 பேர் ராணுவத்தை வரவழைத்து கிழக்கு பாகிஸ்தானில் நிறுத்தினுர். பேச்சு வார்த்தை முறிந்துவிட்டதாய் அறிவித்து மக்கள் மீது ராணுவத்தாக்குதலைக் கட்டவிழ்த்து விட்டார். மக்கள் பிரதிநிதிகளையும், தலைவர் முஜிபுர்ரகிமானையும் சிறையிலடைத்தார்கள், இந்தச் சதியைஎதிர்த்து முறியடிக்க மக்கள் ஆயிதமேந்திப் போராட்டம் துவக்கினுர்கள். பத்து லட்சம் மக்களை ராணுவம் சுட்டுக்கொன்றது. ஒரு கோடி மக்கள் வீடு வாசலை விட்டு இந்தியாவுக்கு வந்து தஞ்சம் புகுந்தனர்.



பி. ராமமூர்த்தி

### முக்திபாகினி

இப்படிப்பட்ட கொடிய ராணுவ சர்வாதிகாரத்தின் கீழ் இருப்பதில்லையென்று தங்கள் சொந்தக் குடியரசாக பங்களாதேச அரசை அமைத்துக் கொண்டார்கள். பாட்டாளிகள், விவசாயிகள், மாணவர்கள், ஜாதி-மத வித்தியாசமின்றி ஒன்றுபட்டு ''முக்தி பாகினி'' என்ற விடுதலைப் படையை அமைத்தார்கள். முக்திபவுஜ் என்று முதலில் இப்படைக்கு பெயர்வைத்திருந்தார்கள். ''பவுஜ்'' என்ற வார்த்தை உருதுமொழியாதலால், பாகிஸ்தான் சர்வாதிகாரிகள்மீது ஏற்பட்டுள்ள வெறுப்பின் காரணமாக அந்த வார்த்தையைக்கூட பிறகு மாற்றி, ''முக்தி பாகினி'' என்ற வங்கமொழி வார்த்தையை வைத்தார்கள். ''முக்தி''யென்றால் விடுதலை, ''பாகினி'' என்றால் வெள்ளம் என்று பொருள். அதாவது, விடுதலை வெள்ளம் என்ற தங்கள் சேனையை அமைத்தார்கள். இந்த மக்களின் விடுதலைப் போராட்டத்துக்கு இந்திய மக்கள் ஆதரவளிப்பது கடமையல்லவா? அதைத்தான் நாம் செய்தோம். அதற்காக பாகிஸ்தான் ராணுவ சர்வாதிகாரி யாகியாகான் நம் நாட்டின்மீது தாக்குதல் தொடுத்தார். அதை முறியடிக்க நடைபெறும் யுத்தத்துக்கு நமது கட்சி ஆதரவளிக்கிறது.

### அமெரிக்காவுக்கு பதிலடி கொடுப்போம்

இந்த யுத்தத்துக்குப்பின்னுல் நின்று பாகிஸ்தானுக்கு உதவியளித்து நம்மைத் தாக்குவதில் அமெரிக்க ஏகாதிபத்யம் ஈடுபட்டுள்ளது இந்தியாவின் நண்பன் என்று கூறி வந்த இந்த அமெரிக்காவிடம் நம் பிச்சை வைத்து, கடன்வாங்கி இந்தியாவில் தொழில் மற்ற அபிவிருத்திகளைச் செய்து வந்தது இந்திராகாந்தியின் அரசு இது ஆபத்தையுண்டாக்கும் என்று ஆரம்ப முதலே கூறி வந்தது மார்க்சிஸ்டுக் கட்சி. பாகிஸ்தான் மூலம் தாக்குதல் நடத்துவது மட்டுமல்ல இந்தியாவுக்கு அளித்து வந்த உதவிகளையும் நிலைநிறுத்தி துரோகமிழைத்து இந்திய மக்களின் முதல்தரமான எதிரியாக நிற்கிறது அமெரிக்க ஏகாதிபத்தியம். அதன் ஏழாவது கடற்படை இந்தியக் கடலில் வந்து பாகிஸ்தானுக்குதவப் போகிறது. இதற்குப் பதிலடி கொடுக்க வேண்டும். இனிமேலாவது இந்திரா காந்தி அரசு அமெரிக்காவை நம்புவதை நிறுத்த வேண்டும். அமெரிக்ககாவுக்குஇந்தியா கொடுத்து வருகிற சுமார் 400 கோடி கடன் வட்டிகளும், தவணைகளும் பத்து, அல்லது பதினைந்து வருடங்களுக்கு கொடுக்க இயலாதென்று நிறுத்தி வைக்க வேண்டும்.

அமெரிக்க பி. எல். 480 சட்டத்தின் கிழ் நமக்கு விற்கப்பட்ட உணவுப் பொருளின் விலை ரூ.21500 கோடி.இப்படி இந்தியாவில் சேமித்து வைக்கப்பட்டுள்ளதில் ஒரு காசும் செலவழிக்கக் கூடாதென்று தடை விதிக்கவேண்டும். இப் பணத்தைச் செலவிட்டு இந்தியாவில் அமெரிக்க உளவாளிகளை வளர்ப்பதும் கையாட்களைச் சிருஷ்டிப்பதும், முதலமைச்சர்கள் பலரையும், மந்திரிமர்களையும் தங்களின் கையாட்களையும் அமெரிக்காவுக்கு அழைத்துப் போவதும் நடத்தப்படுகிறது.

மேலும் அமெரிக்காவின் மூலதனத்தில் கட்டப்பட்டுள்ளபெரும் தொழில்களையும் தேசிய மயமாக்கவேண்டும் இந்த நடவடிக்கைகளை உடன் எடுக்க இந்திராஅரசை மக்கள் வற்புறுத்த வேண்டும்.

சோவியத் யூனியனும் மற்ற சோஷலிச நாடுகளும்தான் இந்தியாவுக்கு இன்று உதவுகின்றன. இந்திய முதலாளிகள், நிலப்பிரபுக்கள், சுரண்டும் கும்பல்கள் சோஷலிச நாடுகளை எதிர்த்து, அமெரிக்காவின் கூட்டாளியாக இந்தியாவை ஆக்கப் பேசி வந்தது முற்றிலும் தவறென்பது நிரூபணமாகி விட்டது. கம்யூனிச எதிர்ப்பு செல்லாது. அதைக் கைவிடுவதொன்றே வழி.

இந்த அமெரிக்க ஏகாதிபத்தியம் ஆசிய மக்களைப் பிளவுபடுத்தி மோதவிட்டு, தனது ஆதிக்கத்தை நீடிக்கவும், சீனுவைத் தாக்கவும் திட்டமிட்டது படுதோல்வியடைந்துள்ளது. ஆசிய நாடுகளிலிருந்து அடி வாங்கி வருகிறது. முதலில் கொரிய மக்கள் மீது யுத்தம் தொடுத்து படுதோல்வியடைந்து பின் வாங்கியது. பிறகு வியத்னும் மக்கள்மீது கொடிய யுத்தத்தை சென்றபத்தாண்டுகளாக நடத்தி பல்லுடைபட்டு, தோல்வி கண்டு பின்வாங்கித் தீரவேண்டியநிலைவந்துள்ளது. வீர வியத்னும் மக்களின் தியாகப்போர் அமெரிக்கப் பொருளாதாரத்தையும் நொறுக்கிச் சீர்குலைத்துள்ளது. இந்த நிலையில் இப்போது தனது கைப்பாவையான பாகிஸ்தான் ராணுவ சர்வாதிகாரிகளுக் காதரவாக வந்து இந்தியாவைத் தாக்கியுள்ளது. இந்தச் சதியை வீர பங்களா தேச மக்கள், இந்தியாவின் உதவியோடு முறியடித்து ஆசிய நாடுகளில் அமெரிக்கஏகாதிபத்யம், மற்ற ஏகாதிபத்தியவாதிகளின் வால்வெட்டப்பட்டு, ஆசிய மக்கள் முன்னேறுவார்கள். அதற்கு பங்களா தேச மக்களின் வெற்றி மிக முக்கியமானது என்று மார்க்ஸிஸ்டுக் கட்சி எடுத்துக் கூறி வந்துள்ளது. சென்ற மார்ச் மாதம் 26ந்தேதி பங்களா தேச அரசு ஸ்தாபிக்கப்பட்டது முதல், அதை அங்கீகரித்து, உதவி செய்யும்படி இந்திய அரசை மார்க்ஸிஸ்டுக் கட்சி வற்புறுத்தி வந்தது. இப்போது இந்திய அரசு அதை அங்கீகரித்துள்ளது வரவேற்கிறோம். யுத்தத்தில் வெற்றி பெற்றதும் பங்களா தேச மக்களின் வாழ்வுக்கு, யுத்த சேதங்களை அகற்றி, வழிவகுக்கவும் இந்திய உதவி தொடர்ந்து கொடுக்கப்பட வேண்டும்.

### யுத்தத்தின் பெயரால்

யுத்தத்தின் பெயரால் நம் நாட்டில் உள்ள கள்ளமார்க்கெட் சுரண்டல் கூட்டம், பணக்கார முதலாளிகள் விலையேற்றி, கொள்ளை லாபமடிக்க முற்படுவதை மக்கள் எதிர்ப்பது அவசியம். அரசு அவர்கள் மீது கடும் நடவடிக்கை எடுக்க வேண்டும். ஏழைகள்மீது வரிச் சுமை ஏற்றக்கூடாது. நிலப்பிரபுக்கள், முதலாளிகள் பணம் படைத்தவர்கள்மீது வரி போட்டு பணம் சேர்க்க வேண்டும். பதினைந்து இருபது ஏக்கரா நிலங்களுக்கு மேல் வைத்திருக்கும் நிலப்பிரபுக்களுக்கு ஏக்கராவுக்கு ரூ. 50 வீதம் வரி போட்டு யுத்த நிதி ஏன் திரட்டக்கூடாது? பணமுள்ளவர்களைத் தியாகம் செய்யச் சொல்லவேண்டும். ஏழைகளும், தொழிலாளி மக்களும் சாதாரண ஜனங்களும் தங்களால் தாங்கக்கூடிய அளவு தியாகம் செய்ய வேண்டும்; செய்யத் தயார். அவர்களை முதலில் நிர்ப்பந்திப்பதற்கு முன் தியாகம் செய்யச் சக்தியுள்ளவர்கள்மீது அரசு நிர்ப்பந்தம் செலுத்தட்டும்.

### பாதுகாப்புச் சட்டம் துஷ்பிரயோகம்

மக்களின் பிரஜாஉரிமைகளை பறிக்க இந்திய பாதுகாப்புச் சட்டத்தைப் பயன்படுத்துவதை அனுமதிக்க முடியாது. முதலமைச்சர் கருணாநிதியைப் பற்றி தமிழ்நாட்டில் ஒரு பத்திரிகை எழுதியதாகக் கூறி அதன் ஆசிரியர்களைக் கருணாநிதியின் அரசு கைது செய்துள்ளது. கருணாநிதியைப் பற்றி விமர்சிப்பது இந்திய பாதுகாப்புக்கு எப்படி எதிராகும்? அப்படியானுல் கருணாநிதியும் தி.மு.க. கட்சியும் மார்க்ஸிஸ்ட் கட்சியைப்பற்றி வாய்க்கு வந்தபடி பேசுவது பாதுகாப்புக்கு விரோதமல்லவா? இப்படி எதிர்க் கட்சிகளை நசுக்க இச் சந்தர்ப்பந்தைப் பயன்படுத்துவது முறையற்றதாகும். கள்ள மார்க்கெட் நடத்துவது, விலைவாசியை ஏற்றுவது, கொள்ளை லாபமடிப்பது போன்ற காரியங்களால் மக்கள் மத்தியில் வெறுப்பு ஏற்படுகிறது. யுத்தத்துக்கு எதிராக வெறுப்புண்டாக்குகிறது. அப்படிப்பட்டவர்கள் மீது நடவடிக்கை எடுப்பது தான் தேவை. தொழிலாளிகள், பொதுமக்கள் ஒன்று திரண்டு கள்ளமார்க்கெட் துரோகிகளைப் பிடித்து போலீசில் ஒப்படைக்க வேண்டும்.

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்டுக் கட்சி இந்த முறையில், மக்களைத் திரட்டி பங்களா தேசம் வெற்றி பெற, பாகிஸ்தான் ராணுவப் படையெடுப்பை முறியடிக்க, அமெரிக்காவின் சதியை முறியடிக்க பூரண ஆதரவளிக்கிறது. அதே நேரத்தில் மக்களின் வாழ்க்கையைப் பாதுகாக்கவும் போராடுகிறது. ஆகவே, தொழிலாளி விவசாயி, பொது மக்கள் இந்தப் பாதையில் முன்னேற அறைகூவல் விடுக்கிறது.

நிதியளித்ததைப் பெற்றுக் கொண்டு—திருப்பூரில் உள்ள தொழிலாளி மக்கள், வாலிபர்கள் முன் வந்து, மார்க்சிஸ்டு கட்சியின் வழிதான் சரியானதென்றுகூறி உதவி செய்வதை வரவேற்று, வாலிபர்கள் மார்க்ஸிஸ்டுக் கட்சியில் ஏராளமாகச் சேரும்படியும், வர்க்கக் கண்ணோட்டமும், மார்க்ஸிஸ ஞானமும் பெற்று, நல்ல கம்யூனிஸ்டுகளாக ஆகும்படியும் அவர் வேண்டிக்கொண்டார்.

கூட்டத்துக்குப்பின் பாவலர் வரதராஜன் குழுவினரின் இன்னிசைக்கச்சேரி நடைபெற்றது

## முஜிபுரை விடுதலை செய்!

### பாகிஸ்தானுக்கு பங்களாதேச அரசு கோரிக்கை

முஜிப்நகர், டிச. 19— சேக் முஜிபுர் ரகுமானை விடுதலை செய்ய வேண்டும் என்று பாகிஸ்தான் அரசாங்கத்துக்கு பங்களாதேஷ் பிரதமர் தாஜுதீன் அகமது கோரிக்கை விடுத்துள்ளார்.

பங்களாதேஷ் ரேடியோவில் பேசிய அவர் இந்தத் கோரிக்கையை விடுத்தார்.

தனது பேச்சில் இந்திய அரசுக்கும் இந்திய மக்களுக்கும் நன்றி தெரிவித்தார்.

பாகிஸ்தானுக்கு ஆதரவாக இருக்கும் நாடுகள் முஜிபுரை விடுதலை செய்யும்படி வற்புறுத்த வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டார்.

## 'நவசக்தி' ஆசிரியர்கள் கைது: ஏ. கே. ஜி. கண்டனம்

சென்னை டிச 19— பாதுகாப்புச்சட்டத்தின் கிழ் பத்திரிகை ஆசிரியர்கள் கைது செய்யப்பட்டிருப்பதைக் கண்டித்து மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்டு கட்சித் தலைவர் ஏ. கே. கோபாலன் ஓர் அறிக்கை வெளியிட்டு இருக்கிருர். அதில் அவர் கூறியிருப்பதாவது;—

''பாதுகாப்புச் சட்டம் நாடாளுமன்றத்தில் நிறைவேற்றப்பட்டபோதே இது பத்திரிகை சுதந்திரத்துக்கு எதிராகவும் அரசுக்குப் பிடிக்காதவர்களைக் கைது செய்யவும் பயன்படுத்தப்படக் கூடும் என்று அச்சம் தெரிவித்தேன்.

இப்போது தமிழ் நாட்டுக்கு வந்தபோது அங்கே இரண்டு பத்திரிகை ஆசிரியர்கள் இந்த சட்டத்தின் கீழ் கைது செய்யப்பட்டிருப்பது கேட்டு அதிர்ச்சியடைந்தேன்.

அமெரிக்காபற்றி கருணுநிதி கூறிய கருத்தை அந்தப் பத்திரிகை ஆசிரியர்கள் கண்டித்தது தான் மாபெரும் குற்றமாம்.

இப்படி முதல் அமைச்சரை விமர்சித்து இருப்பது எப்படித்தான் பாதுகாப்புக்கு விரோதமோ தெரியவில்லை.

இப்படித் தனிப்பட்டவர்களைத் தாக்குவதற்காக பாதுகாப்புச் சட்டம் பயன்படுத்தப்படுமானுல், இனி யாருக்குமே இந்த நாட்டில் பாதுகாப்பு இருக்க முடியாது. இப்படி பாதுகாப்புச் சட்டம் துஷ்ப்பிரயோகம் செய்யப்படுவதை நான் கண்டிப்பதுடன் இதுபற்றி மத்திய அரசுக்கும் சுட்டிக்காட்ட விரும்புகிறேன்''

—இவ்வாறு ஏ. கே. கோபாலன் தெரிவித்துள்ளார்.

## பீடித் தொழிலாளர்க்கு குறைந்தபட்ச ஊதியக்குழு

### அமைச்சர் என். வி. நடராஜன் அறிவிப்பு!

சென்னை, டிச. 19— பீடி மற்றும் சுருட்டுத்தொழிலாளர்களுக்குக் குறைந்தபட்ச ஊதியக்குழு ஒன்றைத் தமிழக அரசு அமைத்துள்ளது.

இத்தகவலை இன்று இங்கு தொழிலாளர் நல அமைச்சர் திரு என். வி. நடராசன் தெரிவித்தார்.

ஏற்கனவே, சில வாரங்களுக்கு முன்பு திருச்சி பீடித் தொழிலாளர் ஸ்டிரைக்கின் போது அமைச்சர் தந்த வாக்குறுதிப்படி இக்குழு அமைக்கப்பட்டுள்ளது.

தமிழகத் தொழிலாளர் துறைத்துணை ஆணையாளரைத் தலைவராகக் கொண்ட இந்தக் குழு தக்க விசாரணைகள்நடத்தி பீடி மற்றும் சுருட்டுத் தொழிலாளர்களுக்கு குறைந்தபட்ச சம்பள விகிதத்தை எவவாறு திருத்தி அமைக்கலாம் என அரசுக்கு ஆலோசனை தரும். ஆறுமாத காலத்திற்குள் இக்குழு தன் அறிக்கையைத் தர வேண்டும்.

புள்ளி விவரத் துறைத்துணை இயக்குநர் இக்குழுவில் சுயேச்சை உறுப்பினராக இருப்பார்.

தொழிலாளர்கள் தரப்பில் ஆலடி அருணு எம். எல். ஏ., மா. பா. சாரதி எம்.எல்.ஏ., வடாற்காடு மாவட்ட பீடித் தொழிலாளர் சங்கச் செயலாளர் வி. கண்ணன், திருச்சி மாவட்ட ஐக்கிய பீடித்தொழிலாளர் சங்கத் தலைவர் ஆர். கருப்பையா, தஞ்சை கோபு முதலியோர் குழு உறுப்பினர்கள். முதலாளிகள் தரப்பில் ஐந்து உறுப்பினர்கள்.

## பரமக்குடியில் சர்வகட்சி ஆர்ப்பாட்டம்

பரமக்குடி, டிச. 19— அமெரிக்க ஏகாதிபத்தியத்தின் கொள்கையைகண்டித்து, வங்க தேசத்தை பாதுகாக்கவும், இந்திய,சோசலிஸ்ட் நாடுகள ஒற்றுமையை வலியுறுத்தி சர்வகட்சி, பள்ளி மாணவர், ஆசிரியர்கள் கொண்ட மாபெரும் ஆர்ப்பாட்டம் நடந்தது.முத்தாளம்மன்கோவில் முன்பு நடந்த பொதுக்கூட்டத்தில் சர்வகட்சி தலைவர்கள், ஆசிரியர்கள் பேசினுர்கள்.

யாஹியாகான்கொடும்பாவி கொளுத்தப்பட்டது.

## பாக். தூதர் பங்களா தேசுக்கு ஆதரவு

ரங்கூன், டிச. 18— பர்மாவில் உள்ள பாகிஸ்தான் தூதர் ஒருவர் பங்களா தேசுக்கு ஆதரவு தெரிவித்துள்ளார்.

அக்யாப் என்ற நகரில் பாகிஸ்தான் தூதராக இருந்த சேக் முகமது அபஜுதீன் சுதந்திர பங்களா தேசுக்கு ஆதரவு தெரிவித்து பாகிஸ்தானுடன் உள்ள உறவுகளை விலக்கிக் கொண்டார்.

# கண்ணோட்டம்

## பாரசப் படை சென்றது... சகோதரக் சோலை நின்றது!

பங்களாதேஷ் போராட்டம் பாகிஸ்தானின் உள்நாட்டு விவகாரம் தானே! அங்கு என்ன நடந்தாலும், வேறொரு நாடான நமது சர்க்கார் தலையிடுவது எப்படி நியாயமாகும்? அதுவும், உசைரநாடுகள் சபையான ஐ. நா. சபையிலே, மிகமிகப் பெரும்பான்மை நாடுகள், "இந்தியப் படைகளும் பாகிஸ்தான் படைகளும்போரை நிறுத்தி, தத்தம் எல்லைகளுக்குப் போய்விடவேண்டும்" —என்று தீர்மானம் நிறைவேற்றியிருக்கும்போது, அதையும் புறக்கணித்துத் தலையிட்டது சரிதானா?...இப்படிப்பட்ட கேள்விகளையும் ஐயப்பாடுகளையும் மிகவும் பெதுசைவும் கவலையோடும் கேட்கக்கூடியவர்கள் இருக்கலாம். அவர்களைப்பற்றி நாம் எவ்விதத்திலும் சந்தேகிக்கவில்லை. பாரதநாட்டின் மீது அவர்களுக்குள்ள நாட்டுப்பற்றையும் தியாக உணர்வையும் நாம் குறைத்து மதிப்பிட வில்லை என்றாலும், அப்படி ஒரு கேள்வியும், உணர்ச்சியும் இருக்கத்தான் செய்கிறது. அதுபற்றியெல்லாம், சிறிது மனம் திறந்து பேசுவது நல்லதுதான்.

பங்களாதேசம் விடுதலைபெற்ற பிற்பாடு—இந்திய, பாகிஸ்தான் யுத்தமும் நின்ற பிற்பாடு—இருட்டடிப்புகளும் எடுபட்ட பிற்பாடு—உணர்ச்சி அலைகளெல்லாம் ஒருவாறு ஓய்ந்துள்ள சூழ்நிலையில், இதுபற்றி சிறிது வெளிப்படையாகவே பேசுவதில் தவறில்லை.

இப்படிக் கேள்விகள் கேட்டு, கவலையைத்தெரிவிக்கும் அவர்களுக்கு, நாம் வணக்கமுடன் கூறும் பதில் இதுதான்;

ஐயா, உங்களது உணர்ச்சிகளை மதிக்கிறோம். உங்களது கவலையைப்புரிந்து கொள்ளுகிறோம். இதற்கு மேல நாம் பேசுகிறோம்.

நாமெல்லாம் சுதந்திரத்தை நேசிக்கிறவர்கள் தானே! நாமெல்லாம் ஜனநாயகத்தைப் போற்றுகிறவர்கள் தானே! நாமெல்லாம் மனித உரிமைகளை மதிக்கிறவர்கள்தானே! இதை எல்லா மதத்தினரும் ஏற்றுக்கொள்ளுகிறார்கள்; எல்லாக் கட்சியினரும் ஏற்றுக்கொள்ளுகிறார்கள். ஏற்றுக்கொண்டு விட்டால் போதுமா? நடைமுறைக்கு வருகிறபோதுதான், மாறுபட்ட உணர்ச்சிகளும் மாறுபட்ட கருத்துகளும் மோதுகின்றன. என்ன சங்கதி என்று கேட்கிறீர்களா? கேளுங்கள்.

கிழக்கு பாகிஸ்தான் என்று அழைக்கப்பட்ட பங்களா தேசத்தில், கடந்த 1970-ம் ஆண்டு டிசம்பரில் தேசீய அசெம்பிளிக்கு தேர்தல் நடந்தபோது, மொத்தமுள்ள 169 சீட்டுகளில் 167 சீட்டுகளை அவாமி லீக் கைப்பற்றியது. அந்த அவாமி லீகின் தலைவர் முஜிபிர் ரஹ்மானிடம் ஆட்சிப் பொறுப்பை ஒப்படைக்க வேண்டியது, நியாயமா, இல்லையா? ஒப்படைக்க வேண்டியது ஜனநாயகமா, இல்லையா?...ஒப்படைத்தாரா யாகியாகான்? தேசீய அசெம்பிளியைக் கூட்டினாரா யாகியாகான்? இல்லையே இதைப்பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்? யாகியாகானின் செயல், மக்களை மதிக்காத செயல், ஜனநாயகத் தீர்ப்பை காலில் போட்டு மிதித்த செயல் என்பது உங்களுக்குப் புரியவில்லையா?

யாகியாகானின் இந்த ஜனநாயக விரோத, சர்வாதிகாரப் போக்கை எதிர்த்து, அவாமி லீகினர் வன்முறையில் இறங்கினார்களா? இல்லையே. ஒத்துழையாமை இயக்கம்தானே நடத்தினார்கள்! அவர்களை எப்படி நடத்தினார் யாகியாகான்?...படைகளை ஏவிவிட்டு, கண்ட கண்ட இடமெல்லாம் சுட்டுக்கொல்ல உத்தரவிட்டார்; மக்களைப் பெருவாரியான அளவில் படுகொலைசெய்த பிற்பாடுதானே, வங்காளமக்கள் வரிந்துகட்டினார்கள்! தலைவர் முஜிபிர்ரஹ்மானைக் கைது செய்து, இராணுவக்கோர்ட்டில் விசாரிக்க இழுத்துச் சென்ற பிற்பாடுதானே, வங்காள மக்களின் விடுதலைச்செல்வங்களை கொளுத்தியும், வங்காளத் தாய்க்குலத்தை மானபங்கப்படுத்தியும் அட்டூழியம் செய்த பிற்பாடுதானே, வங்காள மக்கள் வரிந்துகட்டினார்கள்!

இந்த இரத்தவெறித் தாண்டவத்தைக் கண்ட பிற்பாடு, இனஒழிப்புக் கோரத்தைக் கண்டபிற்பாடும் வங்காள மக்கள் பாகிஸ்தானுடனே ஒட்டியிருக்க உடன்படுவார்களா? இந்தச் சூழ்நிலையில்தானே, மாநில சுயாட்சிக் கோரிக்கையை கைவிட்டு, சுதந்திரக் கோரிக்கையை முன்வைத்தார்கள்? இதைத் தவறு என்று சொல்லுகின்றீர்களா? நீங்கள் உண்மையான வாஸிகளாக இருந்தால், எப்படி நடந்துகொள்ளுவீர்கள்? அது போகட்டும்.

இந்திய அரசு தலையிடலாமா?—என்று கேட்கத் தோன்றும். கேட்க வேண்டிய கேள்விதான்.

வங்காள தேசத்திலே, கிட்டத்தட்ட 20 லட்சம் வங்க மக்களை பாகிஸ்தான் படைகள் கொன்று விட்டன, அவ்வளவு பேர்களைக்கொன்று குவித்ததும், அது அவர்களது உள்நாட்டு விவகாரம், நாம் தலையிடக் கூடாதுதான்.

ஆனால் விஷயம் அத்துடன் நின்றுவிடவில்லையே! 100 லட்சம் வங்கமக்கள் அகதிகளாக இந்தியாவுக்குள் விரட்டப்பட்டிருக்கிறார்களே, அவர்கள் பற்றி என்ன நினைக்கிறீர்கள்? அகதிகள் வந்தால், அவர்களைச் சுட்டு திருப்பி விரட்டியடித்திருக்கலாமே, என்று நினைக்கிறீர்களா? நீங்கள் இரக்கசித்தம் உடையவர்கள். அப்படியெல்லாம் சொல்லமாட்டீர்கள்.

அதிக எண்ணிக்கையில் அகதிகள் வந்துவிட்டதால் அவர்களது பராமரிப்பு பொறுப்பு, நமது நாட்டின் தலையில்தானே விழுகிறது! அதற்காகப் போட்ட வரிகள்...அதனால் ஏற்பட்டுள்ள விலைகள்...அதனால் நாம் படுகின்ற வேதனைகள்...கொஞ்சமா நஞ்சமா? பாகிஸ்தானின் உள்நாட்டு விவகாரம், இப்போது பாரத தேசத்தின் உள்நாட்டு விவகாரமாகிவிட்டது அல்லவா! இதுபற்றி என்ன சொல்லுகிறீர்கள்?

என்ன இருந்தாலும் நாம் "தம்" பிடிக்கணும் என்று கூறிடவும் செய்யலாம்...... அப்படியும்தான் 8 மாத காலம் "தம்" பிடித்தோமே! எப்படியாவது, யாகியாவையும் முஜிபிர்ரையும் ஒட்டுப்போட்டுவிட எத்தனையோ முயற்சிகளை... எத்தனையோ பெரிய நாடுகள் எடுத்துத்தானே பார்த்தன! ஒண்ணும் ஒட்டவில்லையே.

கொடாக்கண்டன் யாகியாகானுக்கமாறிவிட்டபிறகு, விடாக்கண்டர்களாக வங்க மக்கள் ஆகிவிட்டார்கள்.

பிரச்னை முற்றிவிட்டது. வங்காளசுதந்திரம் ஒன்றைத்தவிர, பற்றஎதற்கும் வங்கமக்கள் மசியப் போவதில்லை என்பது உறுதியாகிவிட்டது. அப்புறம் என்ன? சுதந்திரம் கேட்டவர்கள் $7\frac{1}{2}$ கோடிப்பேர்! கொஞ்சநஞ்சமல்ல. அவர்கள் ஒற்றுமையாக இருக்கிறார்கள்; அவர்கள் ஆயுதமேந்தி விட்டார்கள் அவர்களை யாகியா படைகள் அடக்கிட முடியுமா? இப்பொழுது சொல்லுங்கள்; என்ன செய்வதென்று? நீங்கள் சுதந்திரத்தை உயிரென

(8-ஆம் பக்தி பார்க்க)

# சுவையான செய்திகள்

### நிறவெறியின் வேட்டை

ஜோன்ஸ் பர்க், டிச. 18—தென்னாப்பிரிக்காவில் ஜோகன்னஸ் பர்க் நகரிலுள்ள பல ஹோட்டல்களில் வேலை பார்க்கப் போதிய நபர்கள் கிடைக்கவில்லை. ஹோட்டல்களில் வேலைபார்ப்பவர்களில் பெரும்பாலோர் ஆப்பிரிக்கர்களே. ஆனால் தென்னாப்பிரிக்கப் போலீஸாரோ, இனவெறிச் சட்டங்களைக்கொண்டு ஆப்பிரிக்கர்களைச் சிறு குற்றங்கள் செய்தாலும்கூடப் பிடித்துக் கொண்டுபோய் விடுகின்றனர். சிறையிலும் தள்ளி விடுகின்றனர். இதுசம்பந்தமாக ஹோட்டல் முதலாளிகள் விடுத்த வேண்டுகோள்கள் எதுவும் போலீஸாரின் செவியில் ஏறவேயில்லை. அதிலும் ஜோகன்ஸ் பர்க் போலீஸ் அதிகாரி மிகவும் திமிர் பிடித்தவராக இருக்கிறார். வெள்ளையர் வாழும் பகுதிகளில் ஒரு ஆப்பிரிக்கரைக்கூடத் தான் விட்டு வைக்கப்போவதில்லை என்று அவர் கொக்கரிக்கிறாராம்.

### காணமற் போன பிரேஸியர்!

நியூயார்க், டிச. 17—டிக் வார்ப் என்ற சிற்பி ஒரு "அற்புதமான" கலைப் பொருளை உருவாக்கியிருந்தார். அந்தக் கலைப்பொருள் அமெரிக்காவில் டெக்ஸாஸ் மாகாணத்திலுள்ள ஹாவுஸ்டன் நகரின் நவீன கலைக்கூடத்திலும் இடம் பெற்றிருந்தது அந்தக் கலைப்பொருள் வேறொன்றும் அல்ல. பெண்கள் மார்பில் அணிந்து கொள்ளும் பிரேஸியர்தான். ஆனால் இந்த பிரேஸியர் மிகவும் பெரியது. அதாவது இழுத்துப் பிடித்தால் இதன் மொத்த நீளம் பத்தரை மீட்டருக்கும் அதிகம். இந்தப் பிரம்மாண்டமான பிரேஸியர் திடீரென்று ஒரு நாள் காணமல் போய் விட்டது. இதனைக் கண்டு பிடிக்க போலீஸார் மேற்கொண்ட முயற்சிகளும் பலிக்கவில்லை. இவ்வளவு பெரிய பிரேஸியரை யார் திருடியிருக்க முடியும்? திருடினாலும் இதனை எதற்குப் பயன்படுத்த முடியும்? என்று பலரும் வியந்தனர். பாரீஸ் நகரப் பத்திரிகை ஒன்று இதனை இளம் காதலர்கள் தாம் திருடியிருக்க வேண்டும். காதலர் இருவரும் பிக்னிக் போகும் போது அதனைக் கூடாரமாகப் பயன்படுத்திக் கொள்ளலாம் என்ற நோக்கத்துடனேயே திருடியிருக்க வேண்டும் என்றும் வேடிக்கையாக எழுதியுள்ளது.

### சூரப்புலிகள்!

நியூயார்க், டிச. 18—நியூயார்க் மாவட்டத்தைச் சேர்ந்த பஃபலோ நகரிலுள்ள ஒருவானொலி நிலையம் சிலநாட்களுக்கு முன்னர், செவ்வாய்க் கிரகத்தைச் சேர்ந்த நபர்கள் சிலர் அந்த நகருக்கு அருகில் வந்து இறங்கியுள்ளதாக அறிவித்தது. இந்த அறிவிப்பை அறிவிப்பாளர் நடுங்கும் குரலில் வாசித்தார். பின்னர் எச். ஜி. வெல்ஸ் எழுதியுள்ள "உலகங்களின் போர்" என்ற நாவலிலுள்ள சிலபகுதிகளையும் சந்தர்ப்பத்துக்கேற்றவாறு சிறிது மாற்றிவாசித்தார்.

1938-ஆம் ஆண்டிலும் இதே போன்ற அறிவிப்பை நியூயார்க் நகர வானொலி ஒலி பரப்பியது. இந்தப் பொய்யான அறிவிப்பைக் கேட்டுப் பயந்த பல பேர், பீதியில் தற்கொலை செய்து கொள்ளவில்லை எனினும், கேட்டவர்கள் பலரும் இந்தச் செய்தியை உண்மையென்றே நம்பிவிட்டனர். எனவே சிலர் இது உண்மை தானா என்று போலீசுக்கு போன் பண்ணிக் கேட்டனர். வேறு சிலரோ இத்தகைய பீதியைக் கிளப்பி விட்டதற்காக, பஃபலோ வானொலி நிலையத்தைக் கண்டிக்க வேண்டும் என்று ஏனைய வானொலி நிலையங்களிடம் முறையிட்டனர்.

### வியத்நாமில்

நியூயார்க், டிச. 17—அண்மையில் அமெரிக்க டைம் பத்திரிகையில் "கடைசியாகச் சுடப்படும் மனிதனாக நான் இருக்க விரும்பவில்லை" என்ற தலைப்பில் ஒரு கட்டுரை வெளி வந்திருந்தது. வியத்நாமிலுள்ள அமெரிக்கப் போர் வீரர்களின் மனப்பான்மையை அது நன்கு பிரதிபலிக்கிறது. சில சமயங்களில் இந்த உணர்ச்சி மிகவும் வலுவாகவும் உள்ளது. அதாவது அந்தப்போர் வீரர்கள் தமது சொந்த தளங்களைக் காவல் காக்கக்கூடச் செல்ல மறுத்து விடுகின்றனர். ஏனெனில் இது விஷயத்தில் அவர்கள் தமது சைகோன் சகாக்களின் துணையையும் நம்பமுடியவில்லை. "நாங்கள் ஒன்றும் பலசாலிகள் அல்ல. வெளியே சென்றால், எப்போதும் நாங்கள் உதைபட்டுத்தான் திரும்புகிறோம் என்று அமெரிக்கத்தளமொன்றில் இருந்துவரும் தென்வியத்நாமிய சார்ஜெண்ட் ஒருவர் கூறினாராம்.

### அடிபட்டது தான் மிச்சம்!

ஒட்டாவா, டிச 17—கனடா நாட்டைச் சேர்ந்த ஜான் மேயர் என்ற பத்தொன்பது வயது இளைஞன் தன் நண்பனை நோக்கி "நீ என் முழங்காலில் சுட்டு விடு!" என்று கேட்டுக் கொண்டான். காலில் துப்பாக்கிக் குண்டுக் காயம் பட்டால் தான் ஆஸ்பத்திரியில் சேர முடியும்என்று கூறினான். காரணம் அங்கு ஓர் அழகிய நர்ஸ் வேலை பார்த்து வந்தாள். ஆனால் பாவம். அவன் ஏமாந்து விட்டான். ஏனெனில் அவன் காதல் கொண்ட அந்த அழகி வேலை பார்த்து வந்த பிரிவு வேறு. அவள் குழந்தைகள் வார்டில் வேலை பார்த்து வந்தாள். எனவே அவன் வேறு வார்டில் சேர்க்கப்பட்டு விட்டான்.

### சுத்தத் திருடன்!

மூனிச், டிச. 19—மூனிச் நகரப் போலீசார் இப்போது விடுபுகுந்து திருடும் ஒரு திருடனைப் பிடிக்க அரும்பாடுபட்டு வருகின்றனர். அந்தத் திருடனுக்குத் தான் சுத்தமாக இருப்பதில் மிகவும் கவனம் உண்டு என்பதை அவர்கள் கண்டுபிடித்துள்ளனர். அதாவது அவன் இரவில் பூட்டை உடைத்து உள்ளே புகுந்து முடித்தபிறகு, வீட்டுக்காரரின் சோப்பையும், பற்பசையையும் பயன்படுத்தி, பல்லையும் தேய்த்து கைகால்களையும் சுத்தமாகக் கழுவி விட்டுப் போய்விடுகிறானாம். சமயங்களில் வீட்டுக்காரனின் ஷேவிங் செட்டையும் பயன்படுத்தி, க்ஷவரம் பண்ணி முடித்துவிட்டும் சென்றுவிடுகிறானும். சுத்தத்தில் அதிதீவிரமான அக்கறை கொண்ட இந்தத் திருடன் இதுவரையில் 68 இடங்களில் வீடுபுகுந்து கொள்ளை அடித்திருப்பதாகப் போலீஸார் கூறுகின்றனர்.

அதிலும் ஒரே இரவில் பதினறு இடங்களில் திருடியுள்ளானும். இப்படி வீடு புகுந்து திருடும் திருடன் பாத்ரூமுக்குள் சென்று, இத்தனை காரியங்களையும் எவ்வாறு செய்து முடிக்க முடிகிறது. அவ்வாறு செய்யும்போது வீட்டுக்காரர்கள் விழித்து விடாமல் பார்த்துக்கொள்ள அவனால் எப்படி முடிகிறது என்பது போலீசாருக்குப் புரியாத புதிராக உள்ளது.

### வியாபார தந்திரம்!

ரோம், டிச. 17—மான்டிகாட்டினி - எடிசன் என்ற பெரிய வர்த்தகக் கம்பெனி பணம் பார்ப்பதற்கு ஒரு சுலபமானவழியைக்கண்டு பிடித்தது. அக்கம்பெனி இத்தாலிய ராணுவத்திடம், மிக மிக நவீனமான ஒலி பரப்பக் கருவி என்று என்று சொல்லி, ஒரு ஒலி பரப்புக் கருவியை 430 கோடி லயருக்கு விற்று விட்டது. பின்னர்தான் அந்த ஒலி பரப்புக் கருவி அமெரிக்க ராணுவத்திடம் இரண்டாம் உலகயுத்த காலத்தில் உபரியாக இருந்த பழைய கருவிகளில் ஒன்று தான் என்பதும் அதைத்தான் 1971ஆம்ஆண்டு மாடல் என்று சொல்லிஅந்தக் கருவியை அந்தக் கம்பெனி விற்று விட்டது என்பதும் அம்பலமாயிற்று.

### ஜனநாயகத்தின் லட்சணம்

நியூயார்க், டிச. 17—பிலடெல்பியா போலீஸ் கமிஷனராக வேலை பார்த்து வந்த பிராங்கரிஸ்ஸோ என்பவர் ஒரு காலத்தில், "அமெரிக்காவிலே மிகவும் முரட்டுப் போலீஸ் அதிகாரியாக இருந்தவனும் நான்" என்று பெருமையடித்துக்கொண்டதுண்டு. இப்போது அவர் டெமாக்ரட்டுக் கட்சி வேட்பாளராக நகர மேயர் பதவிக்குப் போட்டியிடத் தீர்மானித்து உள்ளார்? போலீஸ் கமிஷனராக இருந்த காலத்தில் "தீவிர வாதிகளை" அடக்கி ஒடுக்கி வைத்திருந்தவன் நான் என்று கூறியே அவர் தமக்கு ஆதரவு தேடி வருகிறார் அவரை ஆதரிப்பவர்களும் அவர் மேயராக வந்தால் அதே காரியத்தைத் தொடர்ந்து செய்வார் என்று எதிர்பார்க்கின்றனர்.

## கலெக்டருக்கு நெசவாளர் சங்கச் செயலாளர் மனு

பரமக்குடி, டிச. 20—பரமக்குடி, எமனேஸ்வரம் பகுதிகளில் போனஸ்— கூலி உயர்வு பிரச்னைக்காக கைநெசவுத் தொழிலாளர்கள் தீபாவளிசமயம் போராடியது தெரிந்ததே.

இந்தப் போராட்டத்திற்கு பிரதான பாத்திரம் வகித்தது சி. ஐ டி. யூ. சங்கம்.

முதலாளிகளின் கையாட்களாக உள்ள ஐக்கிய சமிட்டி என்னும் பெயரில் கூலி உயர்வு ரூ 2 3, 5 என தொழிலாளர்களுக்கு விரோதமாக ஒப்பந்தம் செய்து கொண்டார்கள்.

இந்த ஒப்பந்தத்தை நமது சங்கம் ஆட்சேபித்துள்ளது.

இந்த கூலி உயர்வு ஏற்பட்ட பின் கைத்தறி உற்பத்தியாளர்கள் தொழிலாளர்களைப் பழி வாங்கும் நடவடிக்கையில் ஈடுபட்டுள்ளார்கள்.

பாவு முடிந்தால் மறு பாவு தர 1 வாரம் தவணை சொல்கின்றார்கள்.

இதனால் தொழிலாளர்களுக்கு 20 ரூபாய் நஷ்டமேற்படுகிறது. இது காரணமாய் நெசவாளர்கள் மிகவும் கஷ்டப்படுகின்றனர் கைத்தறி உற்பத்தியாளர்களின் இந்த நடவடிக்கையை எதிர்த்து பரமக்குடி எமனேஸ்வரம் நெசவுத் தொழிலாளர் சங்கம் சார்பாக தோழர் பி. எஸ். துளசிராமன் மாவட்டக் கலெக்டருக்கு விரிவான மனு எழுதியுள்ளார்.

## மன்னார்குடி தாலுகா மாணவர் சங்க அமைப்புக்கூட்டம்

மன்னார்குடி, டிச. 17—இந்திய மாணவர் சங்க தாலுகா கமிட்டி அமைப்புக் கூட்டம் டிச. 15-ம் தேதிநடைபெற்றது. தோழர் ஆர். ஏ. துரை தலைமைவகித்தார்.

மன்னை தாலுகா மாணவர் சங்க தலைவராக தோழர் ஆர். ஏ. துரையும், செயலாளராக தோழர் வி. சாம்பமூர்த்தியும் தேர்ந்தெடுக்கப் பட்டனர். மற்றும் 5 பேர் அடங்கிய குழு அமைக்கப்பட்டது. தஞ்சை மாவட்ட விவசாய சங்கத்தலைவர் தோழர் ஏ. நடராசன் விளக்கவுரையாற்றினர்.

## சர்க்கரை ஆலைத் தொழிலாளர்...

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

சிபாரிசுகளை அமுல்படுத்துவது என்ற தங்களது நோக்கம் நிறைவேறாமல் போய்விடுமோ என்று அச்சமடைந்த முதலாளிகள், கமிட்டி முடிவுக்கு முன்னரே ஊதியக்குழுவின் பரிந்துரைகளை ஒரு தலைப்பட்சமாக அமுல்படுத்துவது என்ற முடிவுக்கு வந்து, திரு. மகாலிங்கத்துக்கு சொந்தமான சக்தி சர்க்கரை ஆலையில் தொழிலாளர்கள் மத்தியில் திணித்தும்விட்டனர். ஒருதலைபட்சமாக நடந்து கொள்ளக் கூடாது என தொழிலாளிகளிடம் வேதாந்தம் பேசும் தி.மு.க. அரசின் கீழ் இயங்கி வரும் அமராவதி கூட்டுறவு ஆலைநிர்வாகமும், கேடுகெட்ட முதலாளிகளின் விருப்பப்படியே பரிந்துரைகளை ஒருதலைபட்சமாக திணித்தது.

13—12—71 தேதி கூடிய முத்தரப்பு கமிட்டிக் கூட்டத்தில், முதலாளிகளின் இப்போக்கைக் கண்டித்து ஐ.என். டி.யூ.சி. தலைமையில் உள்ள சம்மேளனமும், தமிழக சர்க்கரை ஆலை தொழிற்சங்க சம்மேளனத்தைச் சேர்ந்த திரு. எஸ். ஜி. கிருஷ்ணன்(தி.மு.க.) நான் (சி. ஐ. டி. யூ.) திரு. ஆர். கருப்பையா (ஏ. ஐ. டி. யூ. சி.) திரு. ரெங்கசாமி ஐ. என். டி. யூ. சி. ஆகியோரும் முதலாளிகளின் இந்த அநீதிப் போக்கை ஆட்சேபித்தார்கள். முதலாளிகள் தங்களின் இந்த அநியாய செயலை வாபஸ்பெற வேண்டுமென அனைவரும் ஏகமனதாக வலியுறுத்தினர். இந்த நேரத்தில், முதலாளிகளின் இந்த ஒரு தலை பட்சமான நடவடிக்கையை தான் ஆட்சேபிக்க வில்லை. எனவும், அதை ஆட்சேபிப்பதைத்தான் தான் ஆட்சேபிப்பதாகவும், இன்னும் அப்படி செய்யாமலிருந்த முதலாளிகள் தங்கள் தங்கள் ஆலைகளில் அதை செய்ய வேண்டுமெனவும், தனக்கு பணம் தான் தேவை என்றும், இதுதான் தி.மு.க. பேரவையின் (சர்க்கரை ஆலை சம்பந்தமான) கொள்கை என்றும், காட்டூர் கோபால் துரோக சங்கை ஊதினார். சக்தி முதலாளி திரு. மகாலிங்கம் ஆரம்பித்து வைத்த இந்த நடவடிக்கை அவருடைய சொந்த சரக்கில்லை என்பதும். காட்டூர் கோபாலும், சர்க்கரை ஆலை பகாசுர முதலாளிகளும் சேர்ந்து செய்த கூட்டுச் சதி என்பதும் அம்பலமாயிற்று.

முதலாளிகள் ஊதியக்குழு பரிந்துரைகளை ஒரு தலைபட்சமாக அமல் நடத்துவதை, தான் ஆட்சேபிக்கவில்லை என்று கூறும் போது, 'முத்தரப்புக் கமிட்டியின் எதிர்கால முடிவுக்கு பாதகமின்றி' என்ற ஒரு வார்த்தையையும் காட்டூர் கோபால் சேர்த்தார். எல்லாமுதலாளிகளும் ஊதியக் குழு பரிந்துரைகளை திணித்து விட்டால், முத்தரப்புக் கமிட்டிக்கு அத்துடன் வேட்டுவைக்கப்படும் என்று அறிந்த திரு. காட்டூர் கோபால், தொழிலாளிகளிடம் பசப்புவதற்காகவே உபயோகித்த வார்த்தைகளே இவை என்பது தெளிவு.

மேலும், இத்தகைய துரோகங்களை தொடர்ந்து எதிர்த்து தங்களின் நலன்களை பாதுகாக்க தமிழக சர்க்கரை ஆலை தொழிலாளிகள் சங்க வித்தியாசமின்றி அணி திரள வேண்டுமென தமிழக சர்க்கரை ஆலைத்தொழிலாளர்களைசி.ஐ.டி.யூ.வின் சார்பாக வேண்டுகிறேன்.

## வில்கோஸ்தொழிலாளர் சங்க ஆண்டுவிழா

சிறுமுகை, டிச. 18—சிறுமுகையில் உள்ள சௌத் இந்தியா விஸ்கோஸ் கம்பெனி தொழிலாளர் சங்கத்தின் 11-வது ஆண்டுவிழா, டிச. 16-ம் தேதி சிறப்பான முறையில் கொண்டாடப்பட்டது. விழா நிகழ்ச்சிகளுக்கு, சங்கத் தலைவரும், சி. ஐ. டி. யூ. தமிழ் மாநிலக்குழுத் தலைவருமான தோழர் ரமணி தலைமை தாங்கி நடத்தினர். காலை 10 மணிக்கு சங்க அலுவலகத்தின் முன்பு தோழர் கே. ரமணி சங்கக் கொடியினை ஏற்றி வைத்தார்.

மாலை 6 மணிக்கு சங்கத்தின் முன்புள்ள ஜீவா திடலில் அமைக்கப்பட்ட அலங்காரப் பந்தலில் தோழர் எஸ். எம். லட்சுமணன் தலைமையில் பொதுக்கூட்டம் நடைபெற்றது. கோவைமாவட்ட மில் தொழிலாளர் சங்கச் செயலாளர் தோழர் எம். நஞ்சப்பன் வாழ்த்தி உரையாற்றினர். சங்கத்தலைவர் தோழர் கே. ரமணி தற்போது நாட்டில் நிலவி வரும் பல்வேறு நெருக்கடி நிலை குறித்து விரிவாகசொற்பொழிவாற்றினர். பங்களா தேச சுதந்திர குடியரசிற்குவாழ்த்து தெரிவித்தும், யுத்த நிலையைப் பயன்படுத்தி வர்த்தகச் சூதாடிகள் கொள்ளை லாபம் அடிப்பதை தடுக்க. மாநில, மத்திய அரசுகள் நடவடிக்கை எடுக்கக் கோரியும், தொழிலாளி வர்க்கத்தின் ஒன்றுபட்ட போராட்டத்தில், அனைத்துத் தொழிலாளர்களும் சங்க வேறுபாடின்றி போராடவேண்டியதன் அவசியம் பற்றியும் விரிவான முறையில் உரையாற்றினர்.

பல தீர்மானங்கள் இயற்றப் பட்டன. இரவில் பாவலர் வரதராஜன் இன்னிசை நிகழ்ச்சி நடைபெற்றது.

## சர்க்கரை ஆலை முதலாளிகள் ஊழலுக்கு அரசு உடந்தை

சர்க்கரை ஊழலுக்கு இந்திய அரசாங்கத்தின் பங்கு நன்கு தெரிந்த ஒன்றாகும். சர்க்கரைக்கு கண்ட்ரோல் நீக்கப்பட்டதற்குக் காரணம் இந்திரா காங்கிரஸ் கட்சிக்கு தேர்தல் நிதி வாங்க வேண்டும் என்பதைத் தவிர வேறு என்ன காரணம் உள்ளது? பிரதமர் இந்திராகாந்தியின் தீவிர ஆதரவாளனான "பேட்ரியாட்" பத்திரிகையிலேயே வெளியாகியுள்ள விவரத்தைப் பாருங்கள்:—

"கருப்புக்கு சட்ட ரீதியாக நிர்ணயிக்கப்படும் விலையை உயர்த்த அரசு மறுக்கிறது. இதற்குக் காரணம் தற்போதைய விலை நியாயமானது என்று அரசு கருதுவதனால் அல்ல. கரும்பு சாகுபடி செய்பவர்களுக்கு சர்க்கரை ஆலை முதலாளிகள் அதிக விலை கொடுப்பது தடுக்கப்படவில்லை என்பதால்தான், அரசு விலையை மாற்றி நிர்ணயிக்கவில்லை. சட்ட ரீதியாக நிர்ணயிக்கப்பட்டிருக்கும் விலை "தேசிய விலை" என்றும், சர்க்கரை ஆலைகள் அதிக லாபம் பெறுவதால் கரும்பு சாகுபடியாளர்களுக்கு அதிக விலை கொடுக்க வேண்டும் என்று எதிர்பார்க்கப்படுவதாகவும், நாடாளுமன்றத்தில் விவசாயஅமைச்சர் அறிவித்தார். கரும்புக்கு விலைநிர்ணயிக்கப்பட்ட நேரத்தில் மதிப்பிட்டதை விட சர்க்கரை ஆலைகளுக்கு ஏன் அதிக லாபம் கிடைக்கவேண்டும்? சர்க்கரைக்குக் கண்ட்ரோல் கொண்டு வரத் தயங்கிக்கொண்டு அரசு நிலைமையைப் பார்த்துக்கொண்டிருக்கிறது. விலைப் பராமரிப்பு சம்பந்தமாக அரசின் குழப்படி சர்க்கரையில் நன்கு தெரிகிறது. எல்லா ஸ்டாக்குகளையும் அரசே வாங்கி நியாயவிலைக்கடைகளின் மூலம் வினியோகிப்பதின் மூலம் நிலையான உற்பத்தியையும் விலையையும் அரசு உறுதிப்படுத்தியிருக்க முடியும். சர்க்கரைத் தொழிலை நாட்டுடமையாக்குவதின் மூலம் இதை எளிதில் செய்யமுடியும். ஆனால் அவ்வாறு செய்வதற்கு, விலைவாசியைக் கட்டுப்படுத்துவதில் அரசு அதிக அக்கறை செலுத்தவேண்டும். சர்க்கரை ஆலைகளையும் ஒழுங்கு விதிகளுக்கு உட்படுத்தவேண்டும்" என்று அப்பத்திரிகை கூறியுள்ளது.

1969-70-ம் ஆண்டில் எப்போதும் ஏற்பட்டிராத சர்க்கரை உற்பத்தி ஆகியுள்ளது 42 லட்சத்து 60 ஆயிரம் டன் உற்பத்தியாகியுள்ளது. 22 லட்சம் சேமிப்புஉள்ளது. இந்தச் சமயத்தில்தான் சேமிப்பைக்காண செய்யவேண்டும் என்று கூறி உற்பத்தியை நிறுத்தப்போவதாக சர்க்கரை ஆலைகள் மிரட்டின.

பாங்குகள் மீது பளுவைக் குறைக்கவேண்டும் என்பதற்காக சர்க்கரைக் கட்டுப்பாட்டை நீக்கவேண்டும் என்று கூறப்பட்டது. இச்சமயத்தில் சர்க்கரை ஆலைகள் கடந்த காலத்தில் எப்படி நடந்துள்ளன என்பதை அரசாங்கம் மறந்துவிட்டது. சர்க்கரைக் கட்டுப்பாடு நீக்கத்தையடுத்து எப்போதும் மோசடி செய்யப்படுவது வழக்கம். சர்க்கரை விலை ஸ்திரமடையும் என்று அரசு உறுதியளித்தது. விலை குறையும் என்று கூடத் தெரிவிக்கப்பட்டது. நடந்தது நேர்மாறானதே. சர்க்கரைஆலை முதலாளிகளுக்கு தேவைக்கு மேல் கடனுக்கு அரசு உறுதியளித்த போதிலும் விலை ஏறிற்று.

சர்க்கரை சப்ளை குறைக்கப்பட்டது. ஜூலையில் 4 லட்சம் டன்தான் விடுவிக்கப்பட்டது. முந்தைய மாதத்தைவிட இது 75 ஆயிரம் டன் குறைவாகும். சேமிப்பாளர்களுக்கும், சர்க்கரை ஆலை முதலாளிகளுக்கும் தாராளக் கடன் வசதியை அரசு ஏன் திரும்பப் பெறவில்லை? மாதந்தோறும் $6\frac{1}{2}$ லட்சம் டன் சர்க்கரை ஏன் விடுவிக்கப்படவில்லை. ஏழை மக்கள் வாங்கும் முறையில் சர்க்கரைக்கு முழுக் கண்ட்ரோலை ஏன் கொண்டுவரவில்லை.

நாடாளுமன்றத்தில்
(ஜோதிர்மாய்பாசு பேசியது 26-11-71)

(2-ஆம் பத்தி தொடர்ச்சி)

மதிப்பவர்கள். அதனால், சுதந்திரப் போராட்ட வீரர்களை கோடிக் கணக்கில் கொல்ல வேண்டுமென்று சொல்லமாட்டீர்கள்.

என்றாலும், ஒரு உணர்ச்சி...எப்படியோ போய்த் தொலையட்டும். நமக்கு ஏன் அக்கறை?—என்று இனிமேலும் கேட்கலாம்.

சுதந்திர வீரர்களுக்கு இந்தியா உதவி செய்ததால், யாகியாவுக்கு ஆத்திரம்...இந்திய நகரங்கள் மீது, 500 மைல்களுக்கு உள்ளே வந்து குண்டு வீசினார்கள். இப்பவும் சும்மா இருக்கவேண்டுமென்று கூறமாட்டீர்கள் என்று நினைக்கிறோம்.

சரி, இப்பவும் திருப்பி அடிக்கக்கூடாது என்று நினைப்பாரும் ஒரு சிலர் இருக்கலாம். அப்படியே இருந்தோம் என்று வைத்துக்கொள்ளுவோம்.

என்ன நடக்கும் என்று நினைத்தீர்களா? அது எப்படி இருக்கும் என்று நினைத்தீர்களா? யோசித்துப் பாருங்கள்

மேற்கு பாகிஸ்தான் படைகள் என்ன செய்யும்? கிழக்கு பாகிஸ்தானாகிய வங்காள தேச மக்களை அடக்கப்போகும். வங்காள தேச மக்கள் அஹிம்சா பரமோதர்மாக்கள் அல்ல... ஆயுதமேந்தி நிற்பவர்கள். கூற்றினுக்கு உயிர் கோடி கொடுத்தும், சுதந்திரப் பேற்றினைப் பெறுவோம் என்று போர்க்களத்தில் நிற்பவர்கள், ஏழரை கோடி....!

இவர்களை அடக்க மேற்கு பாஸ்தானில் பிறந்த இளைஞர்கள் அத்தனை பேரும், பட்டாள உடைதரித்து, வங்காளம் சென்று போர் புரிந்தாலும்....வியட்நாமில் மாட்டிக்கொண்ட அமெரிக்கர் கதிதான் ஆகுமே தவிர, வங்க மக்களை அடக்கிட முடியுமா? ஒடுக்கிட முடியுமா? மடக்கிட முடியுமா?

பஞ்சாப், சிந்து, பட்டாணி வாலிபர்களெல்லாம், வங்க மண்ணிலே செத்துமடிய நேரிடும். அதுசரி. இந்தப்படை வீரர்கள் வங்காளிகளைச் சும்மா விடுவார்களோ? விடமாட்டார்கள். முப்படைகளும் வங்காள மக்களை-இது வரை 20 லட்சம் பேர்களைக் கொன்றது, போதாது என்று-இன்னும் ஒன்றிரண்டு கோடி மக்களைப் படுகொலை செய்ய நேரிடலாம்...

நீங்கள் சுதந்திரப் போர் புரியும் வங்காள மக்கள் மீது, ஒரு வேளை வெறுப்புள்ளவர்களாக இருந்தாலும் இருக்கலாம். ஆனால்...

மேற்கு பாகிஸ்தான் மக்கள்மீது அன்பு உள்ளவர்களாகத்தான் இருக்க வேண்டும்.

இந்தியா மட்டும் எதிரடி கொடுக்காமலிருந்தால்... வங்காள தேசத்தை விடுவிக்காமலிருந்தால்... மேற்குப் பாகிஸ்தான்முஸ்லீம் வாலிபர்களெல்லாம் சாவார்கள். வங்காள தேச மக்களும் சாவார்கள்.

சுருக்கமாகச் சொன்னால், இரு பாகிஸ்தான் முஸ்லீம் மக்களும் அடித்துக்கொண்டு மடிவார்கள். இது நடக்குமா இல்லையா! இதை நீங்கள் விரும்புகிறீர்களா?

—ஐ. மா. பா.

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக் குழு சார்பில் தீக்கதிர் அச்சகத்தில் (13, முதல் சந்து வடக்குச் சித்திரை வீதி, மதுரை-1.) அச்சிட்டு, வெளியிடுபவர் ஆசிரியர்; கே. முத்தையா.